

# இந்து வேதங்களில் இஸ்லாம்

ஆசிரியர்

அபூ ஆஸியா


المكتب التعاوني للدعوة والإرشاد وتوعية الجاليات بالبديعة

تحت إشراف وزارة الشؤون الإسلامية والأوقاف والدعوة والإرشاد

المملكة العربية السعودية - ص.ب ٢٤٩٣٢ - الرياض ١١٤٥٦

هاتف +٩٦٦-١-٤٣٢٠٨٨٨ فاكس +٩٦٦-١-٤٣٠١١٢٢

# இந்து வேதங்களில் இஸ்லாம்

ஆசிரியர்

**அபூ ஆலியா**

தயாரிப்பு

அழைப்பு,

வழிகாட்டல்களுக்கான

கூட்டுறவுச் செயலகம்,

சனசமூகப் பிரிவு (அல் தீரா)

த- பெ- எண்: 154488 ரியாத்: 11736

தொ.பே.எண்: 4391942 பெக்ஸ்: 4391851

ح المكتب التعاوني للدعوة والإرشاد وتوعية الجاليات بالبديعة، ١٤٢٨ هـ

فهرسة مكتبة الملك فهد الوطنية أثناء النشر

أبو آسية

الإسلام في الكتب الهندوكية باللغة التاميلية /

أبو آسية – الرياض ، ١٤٢٨هـ

٧٢ ص ؛ ١٢ X ١٧ سم

ردمك : ٨-٨٣٠-٥٨-٩٩٦٠-٩٧٨

١– الإسلام والديانات الأخرى

٢– الإسلام – دفع مطاعن أ– العنوان

ديوي ٢١٠ ١٤٢٨/٧٥٩٨

رقم الايداع: ١٤٢٨/٧٥٩٨

ردمك: ٨-٨٣٠-٥٨-٩٩٦٠-٩٧٨

# உள்ளே.........

# மதிப்புரை

***ஜம்மியத்து அஹ்லில் குர்ஆன் வல்ஹதீஸ் (JAQH) மாநில தலைவர் எஸ். கமாலுத்தீன் மதனி அவர்கள் அளித்த மதிப்புரை***

உலகம் தோன்றிய நாள்முதல் இறைவனால் அருளப்பட்ட முதல் மார்க்கம் இஸ்லாம் மார்க்கம் தான். அந்த மார்க்கத்தை மக்களுக்குப் போதிப்பதற்காகத்தான் ஆதி இறைத்தூதர் ஆதம் முதல் இறுதி இறைத்தூதர் முஹம்மது நபி வரை உள்ள எல்லோரும் இறைவனால் அனுப்பப்பட்டார்கள். ஏக இறைவனாகிய அல்லாஹ்வை மட்டும் வணங்க வேண்டும் அவனுக்கு எதையும் இணையாக்கக்கூடாது என்ற ஏகத்துவக் கொள்கையைத் தான் அவர்கள் எல்லோரும் மக்களுக்குப் போதித்தார்கள். சிலை வழிபாட்டையும் படைப்பினங்களை வணங்குவதையும் வன்மையாகக் கண்டித்தார்கள்.

எல்லா வேதங்களும் இவ்வுண்மைகளைக் கூறியுள்ளன. குறிப்பாக இந்து மத கிரந்தங்கள் இவற்றைத் தெளிவுபடுத்தியுள்ளன. ஆனால் தங்கள் வேதத்தில் உள்ள உண்மைகளைப் புரிய முடியாத ஏராளமான பாமர இந்துக்களும், மக்களின் அறியாமையை தங்கள் மூலதனமாகப் பயன்படுத்தி பிழைப்பு நடத்தும் மதகுருமார்களும் மனிதன் படைக்கப்பட்ட நோக்கத்தை அறியாது கண்டதையெல்லாம் கடவுள் என நம்பிவாழும் அவல நிலை நாளா வட்டத்தில் பரவ ஆரம்பித்தது. இதனால் பெரும்பாலான மக்கள் ஏக இறைவனான அல்லாஹ்வையும், ஆதிமார்க்கமான இஸ்லாத்தையும் மறந்து வாழ்கின்றனர். நரகப்படுகுழியை நோக்கி அணியணியாகச் சென்று கொண்டிருக்கின்றனர்.

இவர்களை மீட்டு சுவர்க்கத்திற்கு வழிகாட்டுகின்ற கடமை ஒவ்வொரு முஸ்லிமுக்கும் இருக்கிறது.

அந்த வரிசையில் சகோதரர் அபூ ஆசியா அவர்கள் மிகச்சிறந்த ஒரு ஆய்வை நடத்தி இந்து சமுதாயம் தெரிய வேண்டிய பேருண்மைகள் பலவற்றை வெளிப்படுத்தி யுள்ளார். இந்து வேதங்களில் இஸ்லாம், என்ற இந்தப் புத்தகத்தைப் படிக்கின்ற ஒவ்வொரு இந்துவும் தங்கள் வேதம் போதிக்கும் ஏக இறைவனாகிய அல்லாஹ்வை ஏற்று, ஆதி மார்க்கமாகிய இஸ்லாமிய மார்க்கத்தை மனப்பூர்வமாக தானாக முன்வந்து ஏற்றுக் கொள்வார்கள். என்பதில் சந்தேகமில்லை.

ஒவ்வொரு இந்து மத சகோதரனுடைய கையிலும் இந்தப்புத்தகம் கிடைக்கச் செய்வது இஸ்லாமிய உணர்வுடைய ஒவ்வொரு முஸ்லிமின் கடமையாகும்.

இப்புத்தகத்தை திறம்படத் தொகுத்து பல உண்மைகளை வெளிச்சத்திற்கு கொண்டு வந்துள்ள, துடிப்புள்ள இளைஞர் அபூ ஆசியாவிற்கு வல்ல அல்லாஹ் திறமையையும் ஆற்றலையும் அதிகரித்து, இன்னும் பல ஆக்கங்களை வெளிக்கொண்டு வர அருள்புரிய வேண்டுகிறோம்.

இந்தப் புத்தகத்தை சிறப்பான முறையில் அச்சிட்டு வெளியிட்டு சேவை செய்து வரும் ஹிரா பப்ளிகேஷனுக்கும் நமது வாழ்த்துக்கள்.

கோட்டாறு,
30-05-98

இப்படிக்கு
எஸ். கமாலுத்தீன் மதனி

# பதிப்புரை

மனிதர்கள் இன்று மதத்தின் பெயரால், ஜாதியின் பெயரால் சண்டையிட்டு மிருகங்களைவிட மோசமான நிலைக்குச் சென்று கொண்டிருக்கிறார்கள். இதற்குக் காரணம், தன்னைப் படைத்த இறைவன் யார்? அவன் எப்படிப்பட்ட வல்லமை மிக்கவன்? அவனால் வழங்கப்பட்ட வழிகாட்டுதல் எது? என்பதை சரியாகப் புரியாததுதான்.

ஆதி மனிதன் ஆதமின் மார்க்கம் எது? ஆதி ஆலயம் எது? ஆதி வேதம் எது? என்பதையெல்லாம் மனிதர்கள் எல்லோரும் கண்டிப்பாகத் தெரிந்தாக வேண்டும். அப்போது தான் மனிதர்களிடையில் அமைதியும் சாந்தியும் நிலவும், எல்லா மனிதர்களும் ஆதி மார்க்கத்தை தெரிந்து அதில் இணைந்தால் தான் வெற்றிக் கிடைக்கும்.

அந்த ஆதிமார்க்கம் இஸ்லாம் தான், என்பதை ஆணித்தரமான வாதங்களால் புத்தக ஆசிரியர் நிருபித்திருக்கிறார். இந்துவேதங்களிலிருந்து தக்க சான்றுகளையும் சமர்ப்பித்துள்ளார். யாராலும் மறுக்க முடியாத அளவிற்கு அவருடைய வாதங்கள் அமைந்துள்ளன. மனித சமுதாயமும் குறிப்பாக இந்து சமுதாயமும் நேர்வழி பெற இப்புத்தகம் பெரிதும் பயனுள்ளதாக அமையும்.

புத்தக ஆசிரியர் அவர்களின் ஆக்கங்களில் நான்காவது வெளியீடாக இந்தப் புத்தகத்தை வெளியிடுவதில் எங்கள் வெளியீட்டகம் மகிழ்ச்சியடைகிறது. வல்ல அல்லாஹ் புத்தக ஆசிரியருக்கும் இது வெளிவர காரணமாக இருந்த எல்லோருக்கும் அருள் புரிய வேண்டுகிறோம்.

ஹிரா பப்ளிகேஷன்ஸ்

மனிதர்களே! ஏக

இறைவனாகிய அல்லாஹ்வை

நம்புங்கள்; அவனுக்கு எதையும்

இணையாக்காதீர்கள்!

ஆதிமார்க்கமான இஸ்லாத்தில்

இணையுங்கள்.

JAQH
தமிழ்நாடு

இந்துக்களே! இம்மையிலும்

மறுமையிலும் மோச்சம் பெற

உங்கள் வேதம் வலியுறுத்தும்

ஏக இறைவனான அல்லாஹ்வை

ஏற்றுக் கொள்ளுங்கள்,

ஆதிமார்க்கமான இஸ்லாத்தில்

இணையுங்கள் என

அன்புடன் அழைக்கின்றோம்

JAQH

தமிழ்நாடு

பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்

# இஸ்லாம்

இஸ்லாம் என்னும் பெயரைக் கேட்ட மாத்திரத்திலே பலருக்கு ஒரு அன்னிய உணர்வு வந்துவிடுகிறது. ஏனெனில் இஸ்லாம் ஒரு அன்னிய நாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட மார்க்கம் எனக் கருதுவதினால் தான். இஸ்லாத்தை மேலோட்டமாகப் பார்க்கும் போது இந்த உணர்வு ஏற்படுவது இயல்பே. சற்று ஆழமாக ஆராய்ந்து மாற்றுமத வேதங்களோடு ஒத்து நோக்கிக்காணும் போது இந்த அன்னிய உணர்வு அகன்று ஒரு அன்னியோன்ய உணர்வு ஏற்படுகிறது உண்மையாகும்.

இஸ்லாம் 1400 ஆண்டுகளுக்கு முன்பு முஹம்மத் நபி (ஸல்) அவர்களால் தோற்றுவிக்கப்பட்ட மார்க்கம் என்று பலரும் எண்ணிக் கொண்டிருக்கின்றனர். இது தவறான எண்ணமாகும். ஆதி மனிதரும் ஆதி தந்தையுமான ஆதம் (அலை) அவர்களையும் அவர்கள் மனைவி ஹவ்வா (அலை) அவர்களையும் அல்லாஹ் படைத்து எப்போதும் இப்பூமிக்கு இறக்கி வைத்தானோ, அப்போதே அவர்களுக்கும் அவர்கள் சந்ததியினருக்கும் நேர்வழிகாட்ட ஏக இறைவனால் இறக்கியருளப்பட்ட வாழ்க்கை நெறி தான் இஸ்லாம்.

ஆதம் (அலை), ஹவ்வா (அலை) அவர்களின் மக்களே பூமியில் பெருகியுள்ளனர். காலம் செல்லச் செல்ல மக்கள் மத்தியில் விசுவாச மாற்றம் ஏற்படத்துவங்கிய போது, அவர்களை சீர்திருத்தம் பண்ணி நேர்வழியில் கொண்டுவர ஏக இறைவன் பல தூதர்களை, மனிதர்களிலிருந்து தேர்ந்தெடுத்து

அனுப்பினான். அந்த தூதர்கள் அனைவரின் மார்க்கமும் இஸ்லாமாகத்தான் இருந்தது.

அந்தந்த இறை தூதர்களின் காலத்திற்குப் பின் அந்தந்த சமுதாய மக்கள் அந்த தூதர்களையும், தூதர்களை நேர்மையுடன் பின்பற்றிய பெரியார் களையும் வரம்புமீறிப்புகழ்ந்து இறைவன் அந்தஸ்திற்கு உயர்த்தி வைத்து விட்டார்கள். இதனால் ஏக தெய்வக் கொள்கை, இரு தெய்வக்கொள்கையாக, மூன்று தெய்வக் கொள்கையாக, பல தெய்வக் கொள்கையாக மாறி அதன் அடிப்படையில் பல மதங்கள் தோன்றிவிட்டன. கருணையுள்ள இறைவனும் மேலும் மேலும்பல தூதர்களை அனுப்பி வைத்தான். அவ்வாறு அனுப்பி வைக்கப்பட்ட தூதர்களில் இறுதியானவரும் இஸ்லாத்தின் தூதர்களில் இறுதியானவரும் தான் நபிகள் நாயகம் முஹம்மத் (ஸல்) அவர்கள்.

இஸ்லாம் மார்க்கமானது ஏக இறைவனின் மார்ககமாகும். முஹம்மது (ஸல்) அவர்கள் இஸ்லாத்தை போதிக்க வந்த தூதர்களில் இறுதியானவர்களே தவிர இஸ்லாத்தை தோற்றுவித்தவர்கள் அல்ல.

இஸ்லாத்தின் தூதுத்துவத்தில் தன்னுடைய பங்கு பற்றி நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு கூறுகின்றார்கள்.

தூதர்கள் என்னும் நீண்ட சங்கிலித்தொடரில் எனக்குள்ள தொடர்பு ஒரு அரண்மனைக்கு ஒப்பானதாகும். அந்த அரண்மனை மிக நேர்த்தியான முறையில் கட்டப்பட்டுள்ளது. அதில் எல்லாமே பூர்த்தியடைந்து விட்டன. ஒரே ஒரு செங்கல் தான் வைக்க வேண்டிய இடம் காலியாக இருந்தது. அந்த காலி யிடத்தை நான் நிரப்பி விட்டேன். கட்டிடமும்

பரிபூரணமாகி விட்டது. தூதுத்துவமும் இத்துடன் முடிவடைந்துவிட்டது. (புகாரி, முஸ்லிம்)

இன்று உலகில் முஹம்மது (ஸல்) அவர்கள் கொண்டுவந்துள்ள இஸ்லாம் தானே உள்ளது. முந்தைய தூதர்களின் இஸ்லாம் என்னவாயிற்று எனலாம்?

இன்று உலகில் காணப்படும் மதங்கள் எல்லாமே முந்தைய இறைதூதர்கள் கொண்டு வந்த இஸ்லாம் மார்க்கம் தான். ஆனால் பிற்காலத்தில் இறை தூதர்களின் பெயர்களையும் அவர்கள் இனத்தையும், இடத்தையும் மையமாகக் கொண்டு மதங்களாகி விட்டன. விரிவான விளக்கத்திற்கு ஆசிரியர் **"உலகச் சமயங்கள் - ஒரு தத்துவ பார்வை"** எனும் நூலில் இன்ஷா அல்லாஹ் காணலாம். ஆனால் இஸ்லாம் தனிப்பட்ட இனத்தையோ, இடத்தையோ, நபரையோ குறிப்பிடும் பெயராக இல்லை.

இஸ்லாம் என்னும் சொல்லின் பொருள் கட்டுப்படுதல், கீழ்ப்படிதல் என்பதாகும். இன்னும் சாந்தி சமாதானம் என்னும் ஒரு பொருளும் அதற்கு உண்டு. மார்க்கம் என்னும் ரீதியில் இஸ்லாம் என்பதற்கு "ஏக இறைவனுக்கு முழுமையாக கட்டுப்பட்டு நடந்தால் சாந்தி சமாதானம் கிடைக்கும்" என்னும் பரந்த பொருளைக்கொள்ளலாம்.

முஸ்லிம் என்னும் சொல்லின் பொருளானது. கட்டுப்படுபவன் கீழ்ப்படிபவன் அதாவது ஏக இறைவனுக்கு கட்டுப்படுபவன் கீழ்படிபவன் என்பதாகும்.

ஏக இறைவன் தன் இறுதி வேதத்தில் தன்னுடைய மார்க்கத்தை இஸ்லாம் அல்லாத வேறு பெயர்கள் கொண்டும் குறிப்பிடுகிறான். அவை 'தீனுன் கய்யும்' - 'தீனுல்பித்ரத்' போன்ற பெயர்களாகும்.

## இந்து மதம்

இந்து என்னும் பெயரானது இடைக்காலத்தில் இடப்பட்ட பெயராகும். என்று சுாமி விவேகானந்தரும், சுவாமி சங்கராச்சாரியாரும் ஒத்துக் கொண்டதாகும். ஆதியிலே அது சனாதன தர்மம் என்னும் ஷஷ்வத் தர்மம், என்றும் ஸ்வ தர்மம் என்றும் அழைக்கப்பட்டு வந்தது.

சனாதன என்னும் சமஸ்கிருத சொல்லின் பொருள் நிலையானது, தொடர்ச்சியானது, தொன்மையானது என்பதாகும். ஷஷ்வத் என்பதற்கு வானையும் பூமியையும் உயர்ந்த எண்ணங்களோடு ஒன்றிணைக்கும் நேர்வழி என்பது பொருள். இந்த சனாதனத்தையும் ஷஷ்வத்தையும் ஒன்றிணைக்கும் பெயரால் இஸ்லாத்தை குர்ஆன் குறிப்பிடுகிறது. 'தீனுன்கய்யும்' நிலையான நேரான மார்க்கம் என்பது இதன் பொருள்.

ஸ்வதர்மம் என்று பகவத் கீதை (18:45,47) குறிப்பிடுகிறது. **ஸ்வப்ஹவ நியாக் கர்மம்** - மார்க்கம் இயற்கையானது, பெற்றோர்களது அல்ல என்பது இதன் பொருள். இதையே அல்லாஹ்வுடைய மார்க்கம். தீனுல் ஃபித்ரத் - இயற்கையான முறையிலான மார்க்கம் என்று குர்ஆன் குறிப்பிடுகிறது.

இதிலிருந்து சனாதன தர்மம், ஷஷ்வத் தர்மம், ஸ்வதர்மம், என்பதெல்லாம் சமஸ்கிருத மொழியிலமைந்த இஸ்லாத்தின் மறு பெயர்கள் என்று விளங்கிக் கொள்ள முடிகிறது.

# ஏகத்துவம்

இஸ்லாத்தின் கடவுள் கொள்கை "லா இலாஹ இல்லல்லாஹு" இதன் பொருள் : வணக்கத்திற்குரிய கடவுள் அல்லாஹ்வைத் தவிர யாருமில்லை, என்பதாகும்.

'அல்லாஹ்' என்றதும் ஏதோ அரபு நாட்டுக் கடவுள். முஸ்லிம்களின் குலதெய்வம் என்று எண்ணிக் கொள்ளாதீர்கள். இந்த பிரபஞ்சத்தை படைத்து காத்து அருள் செய்யும் மாபெரும் ஆற்றலுடையவனை தமிழிலே கடவுள் என்றும், ஆங்கிலத்திலே GOD என்றும், ஹிந்தியில் பகவான் என்றும், பார்ஸியிலே குதா என்றும், ஹிப்ருவிலே எலோய் அல்லது எலோஹிம் என்றும், அராமிக்கிலே ஏலோய் அல்லது எல்லோய் என்றும் அழைப்பது போல் அரபியிலே அல்லாஹ் என்று அழைக்கிறோம்.

முஸ்லிம்கள் ஏக இறைவனை 'அல்லாஹ்' என்னும் பெயர் கொண்டு அழைப்பதற்கு காரணம் அரபுமொழி விசுவாசத்தால் என்று எண்ணிக் கொள்ளாதீர்கள். அல்லாஹ் எனும் பெயர் ஏக இறைவனால் அங்கீகரிக்கப்பட்ட ஒரு பெயராகும் இன்னும் அனைத்து மத வேதங்களில் அறிமுகப்படுத்தப் பட்டு அங்கீகரிக்கப் பட்ட பெயராகவும் இருக்கிறது.

இந்து மதத்தின் நான்கு வேதங்களில் ஒன்றான அதர்வன வேதத்தின் இறுதியில் "அல்லாஹ் உபநிஷர்" என்னும் தலைப்பில் ஒரு உபநிஷத்தே இடம் பெறுகிறது. அதில் ஒரு சுலோகம் கூறுகிறது.

**''இல்லாம் தபர இல்லாம் இல்லல்லே. இல்லல்லாம் ஓமல்லாம் இல்லல்லாம் தியான**

நிஸ்வரூபாயா" இதன் பொருள் : அல்லாஹ் - அந்த ஏக தெய்வத்திற்கு யாதொரு இணையுமில்லை. சத்திய தெய்வத்தின் ஓம்கார சத்தத்தை வாழ்த்துங்கள் என்பதாகும்.

பைபிள் கூறுகிறது:

'அல்லேலூயா' கர்த்தருடைய ஊழியக்காரரே துதியுங்கள். கர்த்தருடைய நாமத்தை துதியுங்கள்
(சங்கீதம் 113:1)

ஹிப்ரு மொழியில் கர்த்தருடைய திருநாமம் 'அல்லேலூயா' என்று பைபிள் கூறுகிறது. கிறித்தவர்கள் அல்லேலூயா என்று ஜெபிப்பதைக் காண்கின்றோம்.

'அல்லேலூயா' எனும் பெயரின் இறுதியில் இடம்பெறும் 'யா' என்பது விளிவேற்றுமை சொல்லாகும் யா (YA) = !

'அல்லேலூயா' என்பதை 'யா அல்லோலூ' என்று எழுதினாலும் கூறினாலும் பொருள் மாறுவதில்லை.

ஹிப்ரு மொழி என்பது அரபு மொழிக்கு சகோதர மொழியாகும். ஹிப்ரு மொழியிலான 'அல்லேலூயா' அல்லது 'யா அல்லேலு' என்பதற்கு இணையான அரபு மொழி வார்த்தை 'யா அல்லாஹு' என்பதாகும்.

கிறிஸ்தவர்கள் ஏக இறைவனை 'யா அல்லேலூ' என்றழைக்கிறார்கள். முஸ்லிம்கள் அதே ஏக இறைவனை 'யா அல்லாஹு' என்றழைக்கிறார்கள்.

இன்னும் அல்லாஹ் என்னும் சொல்லுக்கு ஆண்பால், பெண்பால் கிடையாது. பன்மை கிடையாது. ஆனால் அல்லாஹ் என்னும் சொல்லுக்கு மாற்றமாகப் பயன்படுத்தப்படும் எல்லா சொற்களுக்கும் பன்மையும்

பாலும் கற்பிக்கப்படுவதைக காண்கிறோம் கடவுள் என்பதை கடவுளர்கள் என்றும் கடவுளச்சி என்றும் ஆண்டவன் என்றும் ஆண்டவர்கள் என்றும் GOD என்றும் GODS என்றும் GODDESS என்றும் கூறுகின்றார்கள். ஆகவே ஏக இறைவனின் தனித்துவத்தைக் காட்ட அவனை அல்லாஹ் என்னும் பெயர் கொண்டு அழைக்கிறோம்.

அந்த அல்லாஹ் எங்கிருக்கிறான்?

ஏழு வானங்களுக்கு அப்பால் அவனுடைய அர்ஷின் (சிம்மாசனத்தின்) மீதிருக்கிறான் என்று இஸ்லாம் கூறுகிறது.

அர்ரஹ்மான் (அளவற்ற அருளாளன்) அர்ஷின் மீது ஒழுங்குற அமைந்தான். (திருகுர்ஆன் 20:5)

அவனுடைய குர்ஸியும் வானங்களிலும் பூமியிலும் பரவி இருக்கிறது. (திருக்குர்ஆன் 2:255)

அவனுடைய குர்ஸி என்பது அல்லாஹ்வின் பாதத்தின் ஸ்தலமாகும் அர்ஷ் என்பதன் பெறுமதி பற்றி அல்லாஹ்வைத்தவிர வேறு எவரும் அறியமாட்டார்கள் என்று முஹம்மத் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

(தாரகுத்னீ, தாரீகில் கத்தீப், ஹாகிம்)

கிறிஸ்தவ வேதமான பைபிள் கூறுகிறது:

**கர்த்தருடைய சிம்மாசனம் பரலோகத்தில் இருக்கிறது.** (சங்கீதம் 11:4)

**எங்கு சென்று எதுவும் திரும்புவதில்லையோ அது என்னுடைய உயர்ந்த உறைவிடம் அதை சூரியன் பிரகாசிக்கச் செய்வதில்லை. சந்திரனுமில்லை, அக்கினியும் இல்லை (கீதை 15:6) என்று பகவத் கீதை கூறுகிறது.**

இத்தகைய உயர்வான இடத்தில் இருக்கும் ஏக இறைவனை யாரேனும் கண்டதுண்டா?

**என்னை ஒருக்காலும் பார்க்க முடியாது. (7:143)**

**பார்வைகள் அவனை அடைய முடியாது. (6:103)**

என்று குர்ஆன் கூறுகிறது.

**தேவனை ஒருவனும் ஒருக்காலும் கண்டதில்லை** (யோவான் 1:18) என்று பைபிள் கூறுகிறது.

**அவன் மஹாத்மா, காணுதற்கரியவன்.**

(ப. கீதை 7:19)

மதியீனர் மாறுபாடில்லாததும் மேம்பட்ட வேறொன்றில்லாததும் ஆன என்னுடைய பரமாத்மஸ்வ ரூபத்தை அறிய மாட்டாதவர்களாய் தோன்றுதலில்லாத என்னை, தோற்றத்தை அடைந்தவனாக கருதுகின்றனர்.

நான் யோகமாயையினால் மூடப்பட்டு எல்லோருக்கும் விளங்குவதில்லை; மதியிழந்த இவ்வுலகம் பிறப்பற்றவனும் மாறுபாடற்றவனும் அகிய என்னை அறிவதில்லை.

அர்ஜுனா! சென்று விட்டனவும் நிகழ்வனவும் இனி வருவனவும் ஆகிய பொருள்களை நான் அறிவேன். ஆனால் என்னை எவனும் அறியான். (ப. கீதை 7:24,25,26) என்று பகவான் கூறியதாக பகவத் கீதை கூறுகிறது.

யாரும் காணாதபடிக்கு இப்பிரபஞ்சத்திற்கு அப்பாலிருக்கும் ஏக இறைவனின் பண்புகள் அல்லது திருநாமங்கள் குறித்து குர்ஆன் கூறுகிறது.

"நீங்கள் அல்லாஹ் என்று அழையுங்கள்; அல்லது அர்ரஹ்மான் என்றழைத்தாலும்

**எப்பெயரைக் கொண்டு அவனை நீங்கள் அழைத்தாலும்; அவனுக்குப் பல அழகிய திருநாமங்கள் இருக்கின்றன என்று (நபியே) நீர் கூறுவீராக." (திருக்குர்ஆன் 17:110)**

**உண்மையான (இறை)வன் ஒருவன் தான். தெய்வீகத்தன்மை வாய்ந்த பண்புகளைக் கொண்டு அவனுக்கு ஏராளமான பெயர்கள் இருக்கின்றன (ரிக் 1:16:46) என்று ரிக்வேதம் கூறுகிறது.**

அல்லாஹ்வின் குணாதிசயங்களைக் கொண்டு 99 திருநாமங்களை நபிகள் நாயகம் (ஸல்)அவர்கள் கற்றுத் தந்திருக்கின்றார்கள்.

**"ஏகம் ஸத் விப்ரா பஹுதா வதந்தி"**

மெய்ப்பொருள் ஒன்றுதான் அதை ஞானிகள் பலபெயரிட்டு அழைக்கின்றனர் என்று ரிக்வேதம் கூறுகிறது.

இறைவனின் திருப்பெயர்கள் என்று 33 திருப்பெயர்கள் ரிக்வேதம் (2:2:3-11) கூறுகிறது, அதில் பிரம்மா, விஷ்ணு என்னும் பெயர்களும் அடக்கமாகும்.

பிரம்மா என்பதன் பொருள் 'படைப்பாளன்' அரபியில் 'காலிக்' எனப்படும்.

ஏக இறைவனை பிரம்மா என்றழைப்போமானால் மூன்று தலையுடன் ஒவ்வொரு தலையிலும் கிரீடம் வைத்தவரான; தாமரையில் வீற்றிருப்பவரும் சரஸ்வதியின் கணவரான; ருத்திரர்களின் தந்தையுமான பிதாமகர் என்றழைக்கப்படும் பிரம்மா தானே மனக்கண் முன் தோன்றுவார்.

'விஷ்ணு என்பதன் பொருள் 'பரிபாலிப்பவன்' அரபியில் 'ரப்' எனப்படும்.

ஏக இறைவனை விஷ்ணு என்றழைப்போமானால் ஆயுதங்களுடன் கூடிய நான்கு கைகளுடன் - கருநீல மேனியுடைய, அதிதி தேவியின் கடைசி அதித்திய புத்திரரான, லட்சுமியின் கணவரான விஷ்ணு தானே மனக்கண் முன் தோற்றுவார்.

ஆனால்,

**இறைவன் தன்னை வெளிப்படுத்திக் கொள்வதில்லை.** *(அதர்வ வேதம் 32:3)*

அந்த ஆதிபகவானின் வடிவத்தை தேவர்களும் உணர்ந்தவர்களில்லை, அசுரர்களும் உணர்ந்தவர்கள் அல்ல (ப. கீதை 10:14) என்று இந்து வேத இதிகாசம் கூறியிருக்க, ஏக இறைவனின் ஒவ்வொரு பெயருக்கேற்ப ஒவ்வொரு உருவம் கொடுத்து பிறப்பற்ற அவனை பிறப்பிற்குரியவனாக கற்பனை செய்து விட்டதால், ஏக இறைவனை பிரம்மா என்றோ விஷ்ணு என்றோ அழைப்பதில்லை. ஏக இறைவனை அல்லாஹ் என்றழைக்கும் போது எந்த ஒரு கற்பனை உருவமும் எவர் மனக்கண் முன்பும் தோன்றுவதில்லை. ஆகவே அவ்வாறு அழைப்பதே சிறப்பும் பொருத்தமுமாக இருக்கிறது.

ஏகனை காண்பது சாத்தியமில்லை என்றதும் சிலர், இறைவன் ஒரு மாயை என்று கற்பனை பண்ணிக்கொள்கிறனர். இன்னும் நிலம், நீர், காற்று, நெருப்பு, மழை, சூரியன், சந்திரன், மனிதர்கள், விலங்குகள், பறவைகள், எல்லாம் இறைவனின் பிரதிபலிப்பு அம்சம் என்று கூறி இயற்கையை வணங்குபவர்களாக இருக்கின்றனர்.

"எவன் தேவர்களுக்கு முன் பிறந்தானோ அவன் பிறக்காமலேயே அனைத்துமாய் பிறந்தான்" -

(புருஷஷு"க்தம்) என்னும் தத்துவத்தில் மூழ்கியவரெல்லாம் இறைவனைக்குறித்து அறியாதவர்கள் என்றே அதர்வவேதம் கூறுகின்றது.

***யார் அசம்பூதி (இயற்கை)யை வணங்குகின்றார்களோ அவர்கள் அறியாமையில் இருக்கின்றார்கள்.***
*(அதர்வவேதம் 40:9)*

இயற்கை அனைத்தும் இறைவனால் படைக்கப்பட்டவையே இறைவனின் அம்சல் அல்ல என்றே இந்து வேதங்கள் கூறியிருக்கின்றன. ஆனால் வேதங்களுக்கு வியாக்யானம் செய்தவர்களும் இடைச்சொருகல் செய்தவர்களும் "இயற்கை யாவும் இறையுருவே" என்னும் (PANTHEISM) கிரேக்க கோட்பாட்டையொத்த அத்வைத கோட்பாட்டை திணித்ததால் சத்தியம் மறைக்கப்பட்டு மறக்கடிக்கப் பட்டது.

***அவன் ஆதி தேவன். பிறவாதவன்***
*(பகவத்கீதை 10:12)*

அண்டத்தின் முக்கூறு மூலமான மண்ணுலகையும் விண்ணுலகையும் ஆக்கி பொருளனைத்தினையும் தனித்தியங்கி ஆதரவளிப்பவன் அவனே. *(ரிக் 1:15:4)*

அந்த மாபெரும் படைப்பாளியே முந்தைய படைப்புகளையும் சூரியனையும் சந்திரனையும் உண்டாக்கினான். *(ரிக் 10:190:3)*

ஒப்பாரிக்கு உலகை ஆள்பவன், இயங்கும் இயங்காப் பொருள்களுக்கும் தலைவன். ஆன்மாவுக்கு அகத்தூண்டல் அளிப்பவன். *(ரிக் 1:89:5)*

**வல்லமை கொண்ட அந்த இறைவனுக்கே புகழ் அனைத்தும்** *(ரிக் 8:1:1)*

**அந்த வணக்கத்திற்குரியவன் இறைவன் ஒருவன் தான்** *(ரிக் 6:45:16)*

என்று இந்து வேதங்கள் கூறுகின்றன. இத்தகைய பண்புகளை உடைய இறைவன் ஒருவன் தான். அவன் தான் வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்.

''லா இலாஹ இல்லல்லாஹு'' வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர யாருமில்லை- இது தான் இஸ்லாத்தின் கடவுட்கொள்கை.

இதையே எந்த கருத்து சிதைவும் இல்லாமல் வேதங்களின் பிரம்ம சாத்திரம் கூறுகிறது.

**"ஏகம் பிரஹம் தவித்ய நாஸ்தே நஹ்நே நாஸ்தே கின்ஜன்"**

பொருள் : இறைவன் ஒருவனே; வேறு எவரும் இல்லை; இல்லவே இல்லை.

**"ஏகம் ஏவம் அத்விதியம்"**

பொருள் : அவன் ஒருவனே, அவனுக்கு யாதொரு இணையுமில்லை

"யா இக் இத் முஸ்திஇ" (ரிக் 6:45:16)

பொருள் : வணக்கத்திற்குரியவன் இறைவன் ஒருவனே இது ரிக் வேதம் கூறும் வேதாந்தம் ஆகும்.

இன்னும் ஏகத்துவத்தை வலியுறுத்தும் சுலோகங்கள் ஏராளம் இந்து வேதங்களில் காணப்படுகின்றன.

# தூதுத்துவம்

ஏகத்துவத்தை அடுத்து இஸ்லாம் வலியுறுத்தும் கொள்கை தூதுத்துவம் ஆகும்.

''தூதுத்துவம் - என்பது மனித சமுதாயத்தை படைத்த இறைவன், மனிதனின் நன்மைக்காக - மேன்மைக்காக சில வகைகளை வகுத்து வைத்துள்ளான்" அந்த வழிவகைகளை தன்னுடைய வேதத்தின் மூலம் வெளிப்படுத்தி - அந்த வேத வாக்கின் படி வாழ்ந்து வழிகாட்ட மனிதர்களிலிருந்தே தூர்களைத் தேர்ந்தெடுத்து அனுப்பினான்.

***அல்லாஹ் (நல்லோருக்கு) நன்மாராயம் கூறுவோராகவும், (தீயோருக்கு) அச்சமூட்டி எச்சரிக்கை செய்வோராகவும் தன் தூதர்களை அனுப்பி வைத்தான். (2:213)***

நன்மையை ஏவி தீமையைத் தடுப்பதற்காகவே தூதர்களை அனுப்பி வைப்பதாக அல்லாஹ் தன் திருமறையில் கூறுகிறான்.

***அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவர் வராத எந்த சமுதாயத்தவரும் (பூமியில்) இல்லை. (35:24)***

என்று அல்லாஹ் கூறியிருப்பதிலிருந்து உலகில் எங்கெல்லாம் மனித சமுதாயம் வாழ்ந்திருந்ததோ அங்கெல்லாம் நிச்சயமாக இறைதூதர்களை இறைவன் அனுப்பியே இருக்கிறான். அவ்வாறு அனுப்பப்பட்ட தூதர்கள் லச்சத்திற்கும் மேற்பட்டோர்கள் என்று இறுதி தூதர் முஹம்மத் (ஸல்) கூறுகின்றார்கள்.

பல்வேறு மொழியினரும் இனத்தவரும் வாழ்கின்ற பழம் பெருமை வாய்ந்த பாரத நாட்டிற்கு பல தூதர்களை நிச்சயமாக இறைவன் அனுப்பியே இருப்பான். ஆனால் இறைத்தூதுத்துவம் குறித்து பெரும்பான்மை மக்கள் அறியாமலேயே இருக்கின்றனர்.

ஏக இறைவனையும் அவனுடைய தூதர்களையும் விசுவசிக்கக் கூடியவர்களாகவே சாமாரியர்கள் இருக்கின்றார்கள். ஆனால் மோஸஸிற்கு பின் எந்த தூதரையும் சாமாரியர்கள் ஏற்றுக் கொள்வதில்லை.

ஏக இறைவனையும் அவனுடைய தூதர்களையும் விசுவசிக்கக் கூடியவர்களாகவே யூதர்கள் இருக்கின்றார்கள். ஆனால் எசக்கேலுக்குப் பின் எந்த தூதரையும் யூதர்கள் ஏற்றுக் கொள்வதில்லை.

ஏக இறைவனையும் அவனுடைய தூதர்களையும் விசுவசிக்கக்கூடியவர்களாகவே கிறிஸ்தவர்கள் இருக்கின்றார்கள். ஆனால் இயேசு கிறிஸ்துவிற்கு பின் எந்த தூதரையும் கிறிஸ்தவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை.

ஏக இறைவனையும் அவனால் அனுப்பி வைக்கப்பட்ட ஆதி தூதர் ஆதம் (அலை) முதல் இறுதி தூதர் முஹம்மது (ஸல்) அவர்கள் வரையுள்ள அனைத்துத் தூதர்களையும் முஸ்லிம்கள் ஏற்றுக்கொள்கின்றார்கள்.

ஆனால் இந்துக்கள் எந்த இறை தூதர்களையும் ஏற்றுக் கொள்வதில்லை, ஆனால் இறைத்தூதர்கள் மூலமாக அருளப்பட்ட வேதங்களை வைத்திருக்கின் றார்கள்.

யூத வேதமான தோரா அல்லது பென்ட்டாஸ் யார் மூலமாக அருளப்பட்டது என்று ஒரு யூதரைக் கேட்டால் அவர் மோஸஸ் மூலாக அருளப்பட்டது என்று கூறிவிடுவார்.

கிறிஸ்தவ வேதமான சுவிஷேஷம் யார் மூலமாக அருளப்பட்டது என்று ஒரு கிறிஸ்தவரைக் கேட்டால்; இயேசு கிறிஸ்து மூலமாக அருளப்பட்டது என்று கூறிவிடுவார்.

இஸ்லாமிய வேதமான திருக்குர்ஆன் யார் மூலமாக அருளப்பட்டது என்று ஒரு முஸ்லிமைக் கேட்டால்;

அவர் முஹம்மது (ஸல்) அவர்கள் மூலமாக அருளப்பட்டது என்று கூறிவிடுவார்.

இந்து மத வேதங்களான **ரிக், யசூர், சாம, அதர்வன** வேதங்கள் யார் மூலமாக அருளப்பட்டது என்று ஒரு இந்துவைக் கேட்டால் அவர்களால் பதில் கூற முடியாது.

இந்து வேதங்களை பகுத்து தொகுத்தவர் வியாசர் என்பார்கள். வியாசர் என்னும் சமஸ்கிருத சொல்லின் பொருளே தொகுப்பாளர் என்பதாகும். ஆனால் இங்கு தொகுப்பாளரைக் கேட்கவில்லை. வேதம் யார் மூலமாக அருளப்பட்டது என்பது தான் கேள்வி.

வேதம் என்றால் அது கடவுளின் வாக்கு. அதனால் தான் அதற்கு உயர்ந்த மதிப்பளிக்கப்படுகிறது. மதம் என்றிருந்தால் அதற்கு வேதம் ஒன்று இருந்தாக வேண்டும். அந்த வேதம் யார் மூலமாக அருளப்பட்டது என்கிற தெளிவு இருந்தாக வேண்டும். அனுப்புனரோ அல்லது பெறுநரோ இல்லாத சின்னஞ்சிறு கடிதம் கூட மொட்டைக் கடிதாசி என்னும் பெயரில் நிராகரிக்கப்பட்டு விடுகிறது. ஒரு சமுதாயத்திற்கு நேர்வழிகாட்ட வந்த வேதம் வந்த வழி அறியாது நிற்கிறது. பழம் பெருமை வாய்ந்த ஒரு சமுதாயம் தங்களுக்கு வேதம் கொண்டு வந்தவரை - வழிகாட்ட வந்தவரை - இறைவனின் தூதரை தொலைத்து விட்டு நிற்கிறது **"ஒவ்வொரு சமூகத்தவர்க்கும் ஒரு நேர்வழிகாட்டியுண்டு"** என்று (13:7) குர்ஆன் கூறுகிறது. ஆகவே நிச்சயமாக இந்து சமூகத்திற்கு இறைதூதர் வந்திருக்க வேண்டும்.

மறுமையில் நடக்க இருக்கும் ஒரு நிகழ்ச்சி.

மறுமையில் இறைத்தூதர் நூஹ் (அலை) அவர்களும் அவர்கள் சமுதாயத்தினரும் வருவார்கள். நூஹ் (அலை) அவர்களிடம் அல்லாஹ் கேட்பானாம் என்னுடைய செய்தி உமக்கு கிடைத்ததா? என்று, ஆமாம்

இறைவனே (என்று நூஹ் பதிலளிப்பாராம்) அடுத்து நூஹ்வின் சமுதாயத்தினரை பார்த்து அல்லாஹ் கேட்பானாம். "என்னுடைய செய்தியை நூஹ் உங்களுக்கு அறிவித்தாரா? என்று அதற்கு அவர்கள், "எந்த தூதரும் எங்களிடம் வரவில்லையே!" என்பார்களாம். அல்லாஹ் நூஹ் (அலை) அவர்களைப் பார்த்து கேட்பானாம். உமக்கு யார் சாட்சி? என்று. அதற்கு அவர்கள் கூறுவார்கள். "முஹம்மதும் (ஸல்) அவருடைய சமுதாயத்தினரும் தான் (எனக்கு சாட்சி என்பாராம்) அங்கே நானும் எனது சமுதாயத்தினரும் அவருக்காக சாட்சி கூறுவோம் என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாக ஆதாரப்பூர்வமான செய்தி புகாரி என்னும் நபி வழி தொகுப்பில் இடம் பெற்றுள்ளது.

நூஹ் (அலை) தன்னுடைய சமுதாயத்தினருக்கு இறைச்செய்தியை எடுத்துரைத்ததாக கூறுகிறார்.

**நிச்சயமாக நாம் நூஹை அவருடைய சமூகத்தாரிடம் அனுப்பி வைத்தோம். அவர் (அவர்களை நோக்கி) நிச்சயமாக நான் உங்களுக்கு பகிரங்கமாக அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவன் நீங்கள் அல்லாஹ்வையன்றி (வேறெவனையும்) எதனையும் வணங்காதீர்கள். நிச்சயமாக நான் நோவினை தரும் (மறுமை) நாளின் வேதனையை உங்களுக்கு அஞ்சுகிறேன். (என்று கூறினார்) (11:25,26) என்று குர்ஆன் கூறுகிறது.**

குர்ஆனையும் ஹதீஸையும் விசுவசிக்கும் முஸ்லிம்களும் - நூஹ்வின் சமுதாயத்தினருக்கும் நூஹ் (அலை) இறைச்செய்தியை எத்தி வைத்தார் என்பதற்கு சாட்சியாளராக இருக்கிறோம்.

ஆனால் நூஹ்வின் சமுதாயத்தினரான இந்துக்களோ அதை மறுக்கிறார்கள். ஆனால் இந்து மத வேதங்கள் மறுக்கவில்லை.

ஏ அக்னி! நியூஹ் அவர் தூதர் என்று ஒப்புக்கொள்கிறேன் (ரிக் 1:13,4) என்று ரிக் வேதம் கூறுகிறது.

இந்துக்களின் ஆதி கிரந்தங்களில் ஆதம் (அலை), நூஹ் (அலை), முஹம்மத் (ஸல்) ஆகிய மூன்று நபிமார்கள் பற்றிய குறிப்புகள் மட்டும் காணக்கிடைக்கின்றன.

முஹம்மத் (ஸல்) அவர்கள் அகில உலகிற்கும், பொதுவாக இறுதியாக வர இருக்கும் தூதர் என்று முன்னறிவிப்பு செய்யப்படுகிறது.

ஆதம் (அலை) அவர்கள் முதல் மனிதரும் ஆதி தந்தையும் - ஆதி தூதரும் என்கிற ரீதியில் குறிப்பிடுகிறது.

ஆதம் (அலை), முஹம்மது (ஸல்) அவர்களை தவிர்த்து நூஹ் (அலை) பெயர் மட்டும் ரிக் வேதத்தில் 51 இடங்களில், யசூர் வேதத்தில் 2 இடங்களில், சாம வேதத்தில் 8 இடங்களிலும் அதர்வ வேதத்தில் 14 இடத்திலும் குறிப்பிடப்பட்டுள்ளது. என்று மௌலானா ஷாம்ஸ் நவத் உஸ்மானி தன்னுடைய வேத ஆராய்ச்சி தொகுப்பு நூலான 'NOW OR NEVER'-ல் கூறுகிறார்.

இதிலிருந்து இந்து சமூகத்திற்கு என்று வந்த தூதர்களில் வேதம் கொடுக்கப்பட்ட தூதர் நூஹ் (அலை) அவர்களே என்பதே தெளிவு.

இந்து கிரந்தங்களில் 75 இடங்களில் நூஹ் (அலை) அவர்களுடைய பெயர் இடம் பெறுகிறது. இஸ்லாமிய வேதமான திருக்குர்ஆனில் முஹம்மது (ஸல்) அவர்கள் பெயர் 5 இடங்களில் தான் இடம் பெற்றுள்ளது.75 இடங்களில் தங்கள் தூதர் பெயர் இடம் பெற்ற வேதத்தை கையில் வைத்துள்ள இந்துக்கள் தாம் தங்கள் தூதரை மறந்து தூதுத்துவத்தையே மறுக்கிறார்கள்.

இறைவனால் அனுப்பப்பட்ட தூதர்கள் அனைவரும் குறிப்பிட்ட பிரதேசத்திற்கும் - குறிப்பிட்ட

இனத்தினருக்கும் மட்டுமே உரியவர்கள் ஆவார்கள். இப்ராஹீம் இஸ்மாயீல் (அலை) போன்றோர்கள் அரபு இனத்தவருக்காகவும், மோஸஸ், தாவூத், இயேசு (அலை) போன்றோர்கள் இஸ்ரவேல் இனத்தவருக்காகவும், நூஹ் (அலை) அவர்கள் ஜலப்பிரமாயத்திற்கு முன்பும், ஜலப்பிரளயத்திற்கு பின்பு சில காலமும் அன்றைய ஆதிக்கத்தின் சந்ததிகள் அனைவருக்கும் பொதுவாகவும், பிற்காலத்தில் அவர்கள் குமாரர்கள் மூலமாக சந்ததி பிரிந்தபோது ஆரிய சமுதாயத்தினருக்கு மட்முடைய நேரடி தூதராக ஆதி கால கட்டத்திற்க மட்டும் அனுப்பப்பட்ட தூதராகவே இருந்தார்கள். ஆனால் இறுதி தூதர் முஹம்மது (ஸல்) அவர்கள் அகில உலகத்திற்கும் பொதுவானவராகவும், அனைத்து இனத்திற்கும் உரியவராகவும், உலக இறுதி நாள் வரைக்கும் உரியவராகவும் இருக்கின்றார்கள். இதை இந்துமத வேதம் உட்பட அனைத்து மத வேதங்களும் ஒத்துக் கொள்கிறது. ஆனால் இந்துக்கள் இறுதி தூதரை மட்டுமல்ல எந்த இறைதூதர்கள் மேலும் நம்பிக்கை வைப்பதில்லை. இப்படிச் சொல்வதை விட இறைத்தூதர்களை இறைவனின் அவதாரங்களாக நம்பி ஏற்கும் நிலையிலுள்ளார்கள் என்று வேண்டுமானால் கூறலாம்.

*எப்பொழுதெல்லாம் அறம் அழிந்து போய், மறம் மேலோங்குகிறதோ, அப்பொழுதெல்லாம் என்னை நான் பிறப்பித்துக் கொள்கிறேன். நல்லோரைக் காப்பதற்கும், கெட்டவரை கரந்தொடுக்குவதற்கும் தர்மத்தை நிலை நாட்டுவதற்கும் யுகந் தோறும் நான் அவதரிக்கிறேன்.*

*(பகவத்கீதை 4:7-9)*

என்று பகவத் கீதை கூறுகிறது.

(நல்லோருக்கு) நற்செய்தி கூறுவோராகவும் (தீயோருக்கு) அச்சமூட்டி எச்சரிக்கை

**செய்வோராகவும் அல்லாஹ் தூதர்களை அனுப்பி வைத்தான் என்று குர்ஆன் கூறுகிறது. *(2:213)***

இஸ்லாம் கூறும் இறைதூதரின் நோக்கமும், இந்து மதம் கூறும் இறை அவதாரத்தின் நோக்கமும் ஒன்றாக இருப்பதிலிருந்து இறை தூதர்களைத் தான் இந்துக்கள் இறை அவதாரங்கள் என்கிறார்கள் என்று விழங்கிக் கொள்ள முடிகிறது.

இறைவனால் அனுப்பி வைக்கப்பட்ட தூதர்களில் இறுதியானவர்களான முஹம்மது (ஸல்) அவர்கள் அகில உலகத்திற்கும் பொதுவானவரும், இறுதியான வருமாவார் என்று குர்ஆன் கூறுகிறது.

*(நபியே!) நாம் உம்மை மனித குலம் முழுமைக்கும் நன்மாராயங்கூறுபவராகவும் அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவராகவுமேயன்றி (வேறெவ்வாரும்) அனுப்பவில்லை. (34:28)*

*முஹம்மது (ஸல்) அல்லாஹ்வின் தூதராகவும் இறைத்தூதர்களுக்கெல்லாம் இறுதியாகவும் இருக்கின்றார். (33:40)*

*இது குர்ஆனின் கூற்று*

*இதையே "சமுத்ரதுத்த அர்பன்"*

*அந்த அராபியர் தூதர்களுக்கெல்லாம் முத்திரையாக (இறுதியாக) இருப்பார். (ரிக் 1:163:1) என்று ரிக்வேதம் கூறுகிறது.*

*அரபு நாட்டிலே தோன்றிய முத்திரை நபியான முஹம்மது (ஸல்) அவர்கள் 1400 ஆண்டுகளுக்கு முன்னே வாழ்ந்து விட்டு, தன்னை ஒரு அழகிய முன்மாதிரியாக்கி விட்டு - தன் தூதுப்பணியை நிறைவு செய்துவிட்டு இவ்வுலகை விட்டு பிரிந்து சென்று விட்டார்கள்.*

*இறை அவதாரத்தின் இறுதி அவதாரம் கல்கி ஆவார் என்று இந்து மதம் கூறுகிறது. அந்த இறுதி*

அவதாரம் கல்கி இனிவருவார் என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றனர்.

எந்தப் பணிக்காக இறைத்தூதர்கள் அனுப்பப்படுவார்களோ அந்தப் பணியை இறைத்தூதர்களின் இறுதித் தூதர் முடித்து விட்டுச் சென்று விட்டார்கள் என்று இஸ்லாம் கூறுகிறது.

ஆனால் அதே பணியைச்செய்ய இறை அவதாரத்தின் இறுதி அவதாரமான கல்கி இனி வருவார் என்று இந்துக்கள் உறுதியுடன் கூறுகின்றனர்.

**"இந்துக்களே! கல்கி வந்துவிட்டார், 1400 ஆண்டுகளுக்கு முன்பே வந்து விட்டார்" என்கிறார் பண்டிட் வேதபிரகாஷ் உபாதியை.**

வெறும் வாய்வார்த்தையாக இதை அவர் கூறவில்லை. வேதங்களையும், உபநிஷத்துக்களையும், புராணங்களையும் ஆராய்ந்து கல்கி பற்றிய விவரங்களையெல்லாம் தொகுத்து 'கல்கி அவதார்" என்னும் பெயரில் ஒரு நூலையே வெளியிட்டு கூறுகிறார். வியப்பில் ஆழ்த்தும் விஷயம் என்னவென்றால் பாரபட்சமற்ற நிலையில் ஆதாரப்பூர்வமான தகவல்களைத் தொகுத்து வழங்கிய நூலாசிரியர் பண்டிட் வேதபிரகாஷ் உபாதியை வங்காளத்தைச் சேர்ந்த பிராமண இந்துவாவார்.

அந்நூலை அலகாபாத் பல்கலைக்கழகத்திலிருந்து எட்டு பண்டிதர்கள் பார்வையிட்டு ஆதாரப்பூர்வமான செய்திகளையே தொகுத்து வழங்கியுள்ளார் என்று கூறி மதிப்புரை வழங்கி தங்கள் ஆதரவையும் தெரிவித்துள்ளார்கள்.

கலியுகத்தில் கல்கி அவதரிப்பார் என்று இந்து உலகமோ வெகுகாலம் காத்திருக்கிறது. ஆனால் அவர் இனி வரமாட்டார். இந்துக்கள் பெரும் மனச்சுமையுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் கல்கி அவதாரம் 1400

ஆண்டுகளுக்கு முன்பே அரபு நாட்டில் அவதரித்து விட்டார் என்று அந்நூலாசிரியரும் எட்டு பண்டிதர்களும் கூறுகின்றார்கள்.

**அகில உலகத்தின் வழிகாட்டி என்றும், மனித குலத்தின் தலைவர் என்றும் இந்துமதத்தின் புனித நூல்கள் வர்ணிக்கும் இறுதி இறை அவதாரம் கல்கி என்பவர் இறுதி இறை தூதர் முஹம்மது (ஸல்) அவர்களேயாவார்கள் என்கிறார்கள்.**

இறுதி தூதர் முஹம்மத் (ஸல்) அவர்கள் தாம் இந்துகள் எதிர்பார்க்கும் இறுதி அவதாரம் கல்கி என்பவர் என்பதற்கு பண்டிட் வேத பிரகாஷ் உபாதியை இந்து புனித நூல்களிலிருந்து எடுத்துவைக்கும் ஆதாரங்களில் ஒரு சிலதை (17 NOVEMBER 1996 SUNDAY STANDRAD OF KENYA வெளியிட்டது அதை அப்படியே தமிழ்படுத்தி) தருகிறோம்.

1. கல்கி - பகவானின் இறுதி தூதராக அகில உலகத்திற்கும் பொதுவானவராக மனித குலமனைத்திற்கும் வழிகாட்டியாக வருவார் என்று இந்து புனித நூற்கள் கூறுகின்றன.

இறைதூதர் முஹம்மத் (ஸல்)அவர்கள் இறைவனின் இறுதி தூதராக அகில உலகத்திற்கும் பொதுவானவராக - மனித குலமனைத்திற்கும் வழிகாட்டியாக இருக்கிறார்கள் என்று குர்ஆன் கூறுகிறது.

2. இறைவன் தன் தூதை கல்கிக்கு 'ஹரி' என்னும் குகையிலே வழங்குவார் என்று இந்து புராணம் கூறுகிறது.

முஹம்மத் (ஸல்) அவர்களுக்கு முதன் முதலாக இறைச் செய்தியானது ஜிப்ரீல் (அலை) அவர்கள் மூலமாக 'ஹீரா' என்னும் குகையிலே தான் வழங்கப்பட்டது. ஜிப்ரீல் (அலை) அவர்களை கிறிஸ்தவர்கள் கெப்ரேல் என்றும் யூதர்கள், நாமூஸ்

என்றும் அழைக்கிறார்கள். இந்து புராணங்கள் அவரை பரசுராமர் என்று குறிப்பிடுகிறது)

3. இந்து புனித நூல்களில் கல்கியின் தந்தை பெயர் 'விஷ்னு பகத்' என்றும் தாயார் பெயர் 'சுமதி' என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்விரு பெயர்களின் பொருளை அறியும் போது மிக ஆச்சர்யமாக இருக்கின்றது.

'விஷ்னு' என்பது ஏக இறைவனின் பெயர்களில் ஒன்று என்று ரிக்வேதம் கூறுகிறது. இதன் பொருள் 'பரிபாலிப்பவன்' (கடவுள்) 'பகத்' என்பதன் பொருள் 'அடிமை' 'விஷ்ணு பகத்' என்றால் 'கடவுளின் அடிமை' கடவுளை அரபியில் அல்லாஹ் என்கிறோம். 'அடிமை'யை அரபியில் 'அப்த்' என்கிறோம். 'விஷ்ணு பகத்' என்பதை அரபியல் எழுதும் போது (அப்த் + அல்லாஹ்) அப்துல்லாஹ் என்றாகிறது. முஹம்மத் (ஸல்) அவர்கள் தந்தை பெயர் 'அப்துல்லாஹ்' என்பது சரித்திரம் அறிந்த உண்மை.

'சுமதி' என்பதன் பொருள். 'அமைதி' இறை தூதரின் தாயார் பெயர் 'ஆமினா'வாகும். 'ஆமினா' என்னும் அரபிப் பெயரின் பொருள் 'அமைதி' என்பதாகும்.

தாய் தந்தை பெயர் ஒற்றுமையிலிருந்து கல்கி தான் முஹம்மது (ஸல்) அவர்கள் என்பது தெள்ளத் தெளிவு.

4. பேரிச்சம் பழமும் ஆலிவ்வும் கல்கியின் பிரதான உணவாக இருக்கும், இன்னும் அவர் தன் இனத்தார்கள் மத்தியில் நேர்மையானவராகவும் உண்மையானவராகவும் வழங்குவார் என்று இந்து புனித நூற்கள் கூறுவது முஹம்மத் (ஸல்) அவர்களுக்கு அழகாகப் பொருந்திப் போகிறது. தம்முடைய நேர்மை நாணயத்தின் காரணமாக நபித்துவம் அடைவதற்கு முன்பே 'அல் அமீன்' 'அல்சாதிக்' (நம்பிக்கைக்குரியவர், உண்மையானவர்) என்னும் சிறப்புப் பெயர்களை பெற்றவராவார்கள்.

5. கல்கி - உயர் குலத்தில் பிறப்பார் என்று இந்து வேதம் கூறுகிறது.

முஹம்மத் (ஸல்) அவர்கள் குரைஷி குலம் என்னும் உயர்குலத்தில் 'ஹாஷிம்' என்னும் மேல்குடியில் பிறந்தவர்கள் ஆவார்கள்.

6. கல்கி இறைவன் உதவியால் இவ்வுலகையும் ஏழுவானங்களையும் குதிரையில் இருந்தபடியே அதிவேகமாக கடந்து சென்று வருவார் என்று இந்து புனித நூல்கள் கூறுகின்றன.

இது தெள்ளத்தெளிவாக முஹம்மது (ஸல்) அவர்கள் குதிரைக்கும் காவேறு கழுதைக்கும் இடைபட்ட வடிவத்திலமைந்த 'புராக்' என்னும் வாகனத்தில் அமர்ந்து 7 வானங்களையும் கடந்து மிஃராஜ் என்னும் விண்வெளிப்பயணம் செய்ததைக் குறிப்பிடுகிறது.

7. கல்கி இறைவன் புறத்திலிருந்து வந்த உதவியால் வெற்றி வாகை சூடுவார் என்றுள்ளது.

இது திட்டவட்டமாக முஹம்மது (ஸல்) அவர்களின் பத்ரு போர் வெற்றியைக் குறிப்பிடுகிறது.

8. கல்கி கைதேர்ந்த வாள் வீரராகவும், குதிரையேற்றம் செய்பவராகவும் இருப்பார் என்று இந்து நூல் கூறுகிறது. ஜெட் விமானங்களும் இயந்திரத்துப்பாக்கிகளும் போர்க் கருவிகளாகப் பயன்படுத்தப்படும் காலத்தில் இருந்துகொண்டு வாள்போர் புரியும் குதிரை வீரரை இனி எதிர்பார்த்திருப்பது அறிவீனம் ஆகும்.

1400 ஆண்டுகளுக்கு முன்பே வாள் வீரராக இருந்து களம் பல கண்டு வெற்றிகள் பல சூடிய முஹம்மது (ஸல்) அவர்களுக்கே அது முற்றிலும் பொருந்தி விட்டது.

இந்து புனித நூற்கள் கூறும் 'கல்கி' என்பவர் குர்ஆன் கூறும் முஹம்மத் (ஸல்) அவர்களே என்பதற்கு மேற்கண்ட தகவல்கள் போதுமானதே.

இன்னும் இறுதிதூதரின் வருகைக்குறித்து ஏராளமான முன்னறிவிப்புகள் முஹம்மத் (ஸல்) என்னும் பெயரிலும் கூட, இந்து கிரந்தங்களிலும், புராணங்களிலும் இதிகாசங்களிலும் காணப்படுகின்றன.

''ஒரு மிலேச்ச புனிதமான ஆசாரியர் தனது சீடர்களுடன் தோன்றுவார். அவரது பெயர் முஹம்மது ஆகும். அந்த அரபு மஹா தேவ்ரை (வானவர் போன்றவரை) 'பஞ்சஹவ்யா' விலும் கங்கை நீரிலும் நீராட்டி (அவரது அனைத்து பாவங்களையும் கழுவி) மனமார்ந்த பெருமதிப்பையும் பக்தியையும் முன் வைத்துக் கூறுவர். நான் உமக்குக் கீழ்படிகிறேன். மனித சமுதாயத்தின் பெருமையே! அரபுவாசியே! நீர் தான் சாத்தானை ஒழிக்க ஒரு பெரும் படையை திரட்டி உள்ளீர். நீர் மிலேச்ச நாட்டு எதிரிகளிடமிருந்து பாதுகாக்கப்பட்டவராகவும் உள்ளீர். நீர் அந்த மேலான பழம்பொருளின் மீது பக்தி கொண்டவருமே அவனின் அம்சமுமாயிருக்கின்றீர்'' நான் உமது அடிமை. உமது காலடியில் என்னை ஏற்றுக் கொள்ளும். (பவிஷ்ய புராணம் காண்டம் 3:3:5-8)

ஏகத்துவத்தையும் தூதுத்துவத்தையும் அடுத்து இஸ்லாம் வலியுறுத்தும் முக்கிய கொள்கை மறுமை பற்றியதாகும்.

# மறுமை

எந்த ஒரு ஆத்மாவும் மரணத்தை சுகித்தே தீரும். மரணம் நிச்சயிக்கப்பட்ட ஒன்று. மரணத்திற்குப் பின் வாழ்வு உண்டா இல்லையா? என்பது பற்றியும். அது எத்தகையது என்பது பற்றியும் பெரும்பான்மை மக்கள் குழம்பியே உள்ளனர். இஸ்லாம் மரணத்திற்குப் பின்பு வாழ்வு நிச்சயமாக உண்டு. அது நிரந்தரமான மறுமை வாழ்க்கையாகும் என்கிறது.

அல்லாஹ் தன் திருமறையில் கூறுகிறான்:

**(மறுமையை நம்பாத) அவர்கள்; நமது இந்த உலக வாழ்க்கையைத் தவிர வேறு வாழ்க்கைக் கிடையாது. நாம் இறக்கிறோம். ஜீவிக்கிறோம். காலம் தவிர வேறெதுவும் நம்மை அழிப்பதில்லை. என்று கூறுகிறார்கள். அவர்களுக்கு அறிவு கிடையாது. *(45:24)* அந்நாளை (நபியே! நினைவூட்டுவீராக) முதலில் படைப்புகளைப் படைத்தது போன்ற (அந்நாளில்) அதனை மீட்டுவோம் *(21:104)* ஒவ்வோர் ஆத்மாவும் அது தேடிக்கொண்டதற்குத் தக்க கூலி கொடுக்கப்படுவதற்காக *(21:22)* இது நம் மீது வாக்குறுதியாகும். நிச்சயமாக நாம் இதனைச் செய்வோம்.**

***(21:104)***

**எவர்கள் இறைவனை நம்பி நல்லவைகளைச் செய்தார்களோ அத்தகையோருக்கு வெகுமதி(சொர்க்கம்) உண்டு. அத்தகையோருக்கு மன்னிப்பும் உண்டு. யார் நமது வசனங்களைப் புறக்கணித்தாரோ, எதிராக வாதிட்டாரோ அத்தகையோருக்கு (நரகத்தில்) நோவினை தரும் வேதனை உண்டு.** ***(35:55)***

***பயபக்தி உடையவர்களுக்காக சொர்க்கம் சித்தப்படுத்தப்பட்டுள்ளது. (3:133) மறுமையில் இவர்களை நோக்கி நீங்கள் உங்கள் மனைவிமார்களுடன் மகிழ்ச்சியுடன் சுவனபதிக்குள் நுழைந்து விடுங்கள் என்று கூறப்படும். (43:70)***

*பரிசுத்தவான்களுக்கு வாக்களிக்கப்பட்ட சுவனத்தின் உதாரணமானது. அதில் தீங்கற்ற பரிசுத்தமான நீரருவிகள் இருக்கின்றன. பரிசுத்தமான சுவைமாறாத பாலாறுகள் இருக்கின்றன. குடிப்போருக்கு பேரின்பம் அளிக்கக் கூடிய திராட்சை ரச ஆறுகள் இருக்கின்றன. மேலும் தெளிவான தேனாறுகள் இருக்கின்றன. மேலும் அதில் அவர்களுக்கு சகலவிதமான கனிவர்க்கங்களும் தங்கள் இறைவனின் மன்னிப்பும் உண்டு. (47:15)*

*துர்பாக்கியவான்கள் நரகத்தில் வீழ்த்தப்படுவார்கள் (11:106) நரகம் மிகக்கெட்ட தங்கும் இடமாகும். (67:6) அவர்களுடைய தலைகளுக்கு மேலிருந்தும் அவர்களுடைய பாதங்களுக்கு கீழிருந்தும் வேதனை அவர்களை மூடிக்கொள்ளும் (29:55) அது எரித்து மனிதனுடைய கோலத்தையே மாற்றிவிடும். (74:30) நரக வாசிகளின் தேகத்திலிருந்து வடியும் சீழ் தான் அவர்களுக்கு (குடி) நீராக புகட்டப்படும். (14:16) கொதிக்கும் ஓர் ஊற்று ஜலம் புகட்டப்படும். முட்களைத் தவிர வேறு ஆகாரம் கிடையாது. அதனால் அவர்களுடைய தேகம் தழைக்கவும் மாட்டாது. பசியும்தீராது. நரகத்தில் வாழவும் மாட்டான். சாகவும் மாட்டான். (20:74)*

*இத்தகைய மறுமை வாழ்க்கை குறித்து அனைத்து இறைதூதர்களும் அச்சமூட்டி எச்சரிக்கை செய்துள்ளார்கள். முந்தைய இறைவேதங்களும்,*

இறைத்தூதர்களின் போதனைகளும் மறைக்கப்பட்டு மறக்கடிக்கப்பட்டு விட்டதால் மறுமை பற்றிய அச்ச உணர்வு பெரும்பான்மை மக்களிடம் இல்லாது போய் விட்டது.

இஸ்லாம் வலியுறுத்தும் மறுமை வாழ்க்கையை இந்து கிரந்தங்கள் 'புனர்ஜென்மம்' 'பர்லோக்' என்கிற பெயரில் வலியுறுத்துகிறது.

புனர் (மற்றொரு (அ) அடுத்த) + ஜன்மம் (வர்ழ்க்கை) = மற்றொர வாழ்க்கை = மறுமை வாழ்க்கை

"இந்து வேதங்கள் குறிப்பிடும் புனர்ஜென்மம் என்பது இந்த உலக வாழ்க்கைக்கு பின் உள்ள மறு உலக வாழ்க்கை ஆகும். திரும்ப திரும்ப ஜன்மம் எடுத்துவரும் வாழ்க்கையல்ல" என்று Dr. Farida Chauhan தன்னுடைய Punajanam Aur Ved நூலில் (பக்கம் 93)ல் கூறுகிறார்.

ஆன்மாவானது மறுபடியும் மறுபடியும் பல ஜென்மம் எடுத்து வரும் என்று எந்த இந்து வேதமும் குறிப்பிடவில்லை என்று Sri Satya Prkash Vidya Lankar தன்னுடைய Awagawan நூலில் (பக்கம் 104) குறிப்பிடுகிறார்.

மறுபிறவித் தத்துவம் என்பது ஒரு கொள்கை அளவில் மட்டுமே இந்து மதத்தில் குறிப்பிடப்படுகிறது. அது உண்மையென்றோ அடிப்படையான தத்துவம் என்றோ கொள்ளப்பட வேண்டியது இல்லை. வேதங்களோ, உபநிஷத்துகளோ இதை குறிப்பிடவில்லை என்று சுவாமி பூமாந்த தீர்த்தர் கூறுகிறார். (Ref.ஞான பூமி ஏப்ரல் 97 பக்கம் 10)

மரணத்திற்கு பின்னுள்ள நிரந்தர மறுமை வாழ்க்கையைப் பற்றி இறைவனின் இறுதி கிரந்தம் கூறுவதையே இந்து கிரந்தங்கள் கூறுகின்றன.

*ஏ அக்னி! இந்த (இறந்த) மனிதர் மறு உலகிற்கு செல்வார். (ரிக்வேதம் 10:16:5)*

*ஏ கணவன் மனைவியரே! நீங்கள் ஒற்றுமையாய் நல்லறங்களை செய்யத் துவங்குங்கள்; சொர்க்க வாழ்க்கையை உண்மையில் அனுபவிப்பீர்கள்.*

*(அதர்வ வேதம் 6:122:3)*

*சுவனத்தில் வெண்ணெய் வழிந்தோடும் ஓடைகளும், சேமித்து வைக்கப்பட்ட தேனும் இன்னும் பழரசங்கள், பால் தயிர் நீர் எல்லாம் கைக்கெட்டும் தூரத்தில் கிடைக்கும் வகையில் சதா சிற்றாறுகளாய் ஓடிக் கொண்டிருக்கும். அவைகள் உன்னுடைய மகிழ்ச்சியை அதிகப்படுத்தும். ஏரியில் நிரம்பிக் கிடக்கும் தாமரை மலர்கள் உன்னுடைய ஆத்மாவை வலிமைப்படுத்தும்.*

*(அதர்வ வேதம் 4:34:6)*

*யார் பெரும்பாவியாக, பொய்யனாக, நம்பிக்கையற்றவனாக இருந்தானோ அவன் நரகாஸ்தனத்தில் (நரகத்தில்) இருப்பான்.*

*(ரிக்வேதம் 4:5:5)*

நரகத்தில் நுழைந்தவுடன் தாங்கமுடியாத வேதனை துவங்கும். கை கால்கள் எரிக்கப்படும். விறகுக்கட்டுகள், அவனை சுற்றி குவித்து வைக்கப்பட்டு எரிக்கப்படும். அவனுடைய சதை அவனுக்கு உண்ணக்கொடுக்கப்படும். தன்னைத்தானே செதுக்கிக் கொள்வான் அல்லது பிறரால் வெட்டப்படுவான். குடல்கள் பிதுங்கி வெளியே தள்ளப்பட்டவனாக இருப்பான். எனினும் அவன் உயிருடனேயே இருப்பான். அவன் சாகாது தொடர்ந்து வேதனையை அனுபவித்துக்கொண்டே இருப்பான்" என்று ஸ்ரீமத் பாகவத் மஹா புராணம் கூறுகிறது.

# இந்து வேதமும் - இறுதி வேதமும்

இறை வேதம் என்றால் - அது இறைவனின் வார்த்தை மனிதர்களால் எழுதப்பட்டதல்ல. இறைவனால் அருளப்பட்டது என்பது தான் எந்த ஒரு இறைவிசுவாசியின் பதிலாக இருக்கும். ஆனால் இறுதி வேதமான திருக்குர்ஆன் தவிர்த்து உலகில் காணும் அனைத்து மதங்களின் வேதங்களிலும் கடவுளின் வாக்கும் இருக்கின்றன இன்னும் பெரும்பான்மை பகுதி மனிதர்களின் கற்பனையும் இருக்கின்றன என்பது மறுக்க முடியாத உண்மை.

இறைவாக்கில் மனித கைகள் ஊடுருவி களங்கம் ஏற்பட்ட காரணத்தினால் தான் இறைவன் ஒன்றன் பின் ஒன்றாக புதிய வேதங்களை இறக்கியருளினான். இறுதி வேதமான திருக்குர்ஆனை இறக்கியருள் புரிந்து, அதனை நாமே பாதுகாப்போம் என்று வாக்குறுதியும் வழங்கியுள்ளான். ஆதலால் 1400 ஆண்டுகளுக்கு முன் அருளப்பட்ட திருக்குர்ஆன் இன்றுவரை மனித கைகளால் மாசுபடுத்தமுடியாத விதத்தில் தூய்மையாக இருக்கிறது. மற்ற மதங்களின் வேதங்களோ மனித கைகளால் மாசுபடுத்தப்பட்ட நிலையிலே இருக்கின்றன ஆயினும் ஒரு சில வசனங்கள் தூயவடிவில் இருக்கவே செய்கின்றன. அவகைளை ஆராயும் போது அவைகள் துல்லியமாக தூயதிருமறை திருக்குர்ஆனுக்கு ஒத்துக்போகின்றன. இந்துக்களின் கிரந்தங்களின் நிலை என்ன எனக்காண்போம்.

இந்து வேதங்கள் ரிக், யசூர், சாம், அதர்வணம் என்று நான்கு உண்டு. ஒரு வேதம் தான் நான்கு பிரிவாக பிரிக்கப்பட்டுள்ளது என்ற கருத்தும் உண்டு. நான்கு வேதங்களும் தனித்தனியாக அருளப்பட்டது என்ற கருத்தும், உண்மையான வேதம் தொலைந்துவிட்டது, நான்கும் பின்பு தொகுக்கப்பட்டவையே என்கிற கருத்தும்

உண்டு. இதில் மூன்றாவது கருத்து ஏற்புடையதாக இருக்கிறது.

ஆதியானது ரிக்வேதம் எனப்படுகிறது. இதில் 1028 பாடல்களும் 10500 எண்ணிக்கைக்கு அதிகமான செய்யுள்களும் உள்ளன.

யசூர் வேதம் - யாகங்கள் முதலிய வைதிகச் சடங்குகளை விவரிக்கிறது.

ஸாம வேதம் (இசை வேதம்) பண்களின் தொகுப்பு ஆகும். இதில் 1594 பாடல்களில் 1474 பாடல்கள் ஏற்கனவே ரிக்வேதத்தில் உள்ளன.

அதர்வவேதம், துர் தேவதைகளை மகிழ்விப்பதற்காக இயற்றப்பட்ட மந்திரங்களையும், வசிய மந்திரங்களையும் கொண்ட மந்திர வேதமாகும்.

"நூஹ்விற்கு எதனை உபதேசித்தேனோ அதனையே உங்களுக்கு மார்க்கமாக்கியிருக்கிறேன்." என்று அல்லாஹ் கூறுகின்றான். இந்துக்களின் ஆதிகிரந்தங்கள் நூஹ் (அலை) (மஹாநுவு) கொண்டு வந்தது தான். என்றால் அது நிச்சயமாக திருக்குர்ஆனுக்கு ஒத்துப் போகும். இறுதி வேதத்தோடு இந்து வேதங்களை ஒத்து நோக்கும் போது சுலோகங்கள் இறைவசனத்திற்கு ஒத்துப் போகவே செய்கின்றன. அவற்றில் ஒரு சிலதைக் காண்போம்.

1. புகழ் அனைத்தும் அகிலங்களை படைத்து பரிபாலிக்கும் அல்லாஹ் ஒருவனுக்கே.

(திருக்குர்ஆன் 1:1)

புகழ் அனைத்தும் வல்லமை கொண்ட கடவுள் ஒருவனுக்கே. (ரிக்வேதம் 8:1:1)

2. (அல்லாஹ்) அளவற்ற அருளாளன்; நிகரற்ற அன்புடையோன்.

(திருக்குர்ஆன் 1:2)

அளவற்ற தயாள குணம் வாய்ந்தவன்.

(ரிக்வேதம் 3:34:1)

**3. நீ எங்களை நேர் வழியில் நடத்துவாயாக.**

**(திருக்குர்ஆன் 1:5)**

எங்கள் நன்மைக்கான நேர்வழியை காட்டு

(யசூர் வேதம் 40:16)

**4. நிச்சயமாக வானங்கள் பூமியின் ஆட்சி அல்லாஹ்வுக்கே உரியது. அல்லாஹ்வையன்றி உங்களுக்கு பாதுகாவலனோ உதவி செய்பவனோ இல்லை என்பதை நீர் அறியவில்லையா?**

**(திருக்குர்ஆன் 2:107)**

பரந்த வானங்களின் மீதும் பூமியின் மீதும் ஆட்சி அதிகாரமும் வல்லமையும் கொண்டவன் அவனே. அந்த ஈஸ்வரனால் மட்டுமே அவர்களுக்கு உதவ முடியும். (ரிக் 1:100:1)

**கிழக்கும் மேற்கும் அல்லாஹ்வுக்கே (சொந்தம்); நீங்கள் எந்தப்பக்கம் திரும்பினாலும் அங்கே அல்லாஹ்வின் முகம் இருக்கிறது. நிச்சயமாக அல்லாஹ் விசாலமானவன். எல்லாம் அறிந்தவன்.**

**(திருக்குர்ஆன் 2:115)**

அவன் எல்லா திசைகளிலும் இருக்கிறான்

(ரிக் வேதம் 10:12:14)

கிழக்கிலும் மேற்கிலும் மேலிலும் கீழிலும் ஒவ்வொரு இடத்திலும் இவ்வுலகைப் படைத்தவன் இருக்கிறான். (ரிக் வேதம் 10 : 36:14)

இறைவனின் பார்வை எல்லா பக்கங்களிலும் இருக்கிறது. இறைவனின் முகம் எல்லா திசைகளிலும் இருக்கிறது. (ரிக்வேதம் 10:81:3)

**6. (அல்லாஹ்) அவனே எல்லாப் பொருட்களையும் படைத்தான். (திருக்குர்ஆன் 25:2)**

பரமாத்மா எல்லா பொருட்களுக்கும் காரணகர்த்தராக இருக்கிறார். (அதர்வணவேதம் 7:19:1)

7. (அல்லாஹ்) அவன் தான் இரவையம் பகலையும அடுத்தடுத்து வருமாறு ஆக்கினான்.
(திருக்குர்ஆன் 25:62)

இரவுகளும் பகல்களும் அவன் விதித்து அமைத்ததே.
(ரிக் வேதம் 10:190:2)

8. (நீங்கள் களைப்பாறி) அமைதி பெற அவனே இரவையும் காலக்கணக்கினை அறிவதற்காக சூரியனையும் சந்திரனையும் உண்டாக்கினான்.
(திருக்குர்ஆன் 6:96)

அந்த மாபெரும் படைப்பாளியே முந்தைய படைப்புகளையும் சூரியனையும் சந்திரனையும் உண்டாக்கினான். (ரிக்வேதம் 10:190:3)

9. அல்லாஹ்வோ வானங்களிலுள்ளவற்றையும், பூமியில் உள்ளவற்றையும் நன்கு அறிகிறோம். மேலும் அல்லாஹ் எல்லாப் பொருள்களையும் நன்கறிகிறவன்.
(திருக்குர்ஆன் 49:16)

10. (யாவற்றுக்கும்) முந்தியவனும் அவனே. பிந்தியவனும் அவனே. பகிரங்கமானவனும் அவனே. அந்தரங்கமானவனும் அவனே. மேலும் அவன் அனைத்துப் பொருட்களையும் நன்கறிந்தவன்.
(திருக்குர்ஆன் 57:3)

ஏ பரமேஸ்வர், நீ அந்தரங்கமானவனும், முந்தியவனும் நன்கறிந்தவனுமாவாய். (ரிக்வேதம் 1:31:2)

11. அல்லாஹ்வுடைய ஸுன்னத்தில் (நடைமுறையில்) நீர் எவ்வித மாறுதலையும் காணமாட்டீர். (திருக்குர்ஆன் 48:23)

அவன் நடைமுறைகளில் ஒன்று கூட மாற்றத்திற்குரியது அல்ல. (அதர்வ வேதம் 18:1:5)

***12. அல்லாஹ்வுடைய வாக்குகளில் எவ்வித மாற்றமுமில்லை. (திருக்குர்ஆன் 10:64)***

*இறைவனின் புனித வாக்குகளில் மாற்றங்களேயில்லை. (ரிக்வேதம் 1:24:10)*

***13. (அல்லாஹ்) அவன் மிகவும் பெரியவன், மிகவும் உயர்ந்தவன். (திருக்குர்ஆன் 13:9)***

*இறைவன் உண்மையில் மிகப்பெரியவன். (அதர்வ வேதம் 20:58:3)*

*இந்த வசன ஒற்றுமையிலிருந்து இவையனைத்தும் ஒரே இறைவனிடமிருந்து வந்தவை தான் என்பதில் சந்தேகம் இல்லை. இறைவனே நன்கறிந்தவன். இது போல் இன்னும் ஏராளமான சுலோகங்கள் குர்ஆன் வசனத்திற்கு ஒத்திருக்கின்றன. இன்னும் இறைவன் தன் இறுதி வேதமான திருக்குர்ஆனில் காட்டிய நடையழகை கூட இந்து வேதங்களில் காண முடிகிறது.*

प्रतित्यं चारुमध्वर गोपोथाय प्रहूयसे। मरुन्दिरग्न आ गहि (१)
नहि देवोन मर्त्यो महस्तव क्रतु परः। मरुन्दिरग्न आ गहि (२)
ये महोरजसो विदुर्विश्वे देवासो अद्रुहः। मरुन्दिरग्न आ गहि (३)
ये अग्रा अर्कमानृ चुरना धृष्टास ओजला। मरुन्दिरग्न आ गहि (४)
ये शुभ्राघोरवर्पसः सुक्षत्रासो रिशादसः। मरुन्दिरग्न आ गहि (५)
ये नाकस्याधि रोचने दिवि देवास आसते। मरुन्दिरग्न आ गहि (६)
ये ईडखयान्ति पर्वतान तिरः समुद्रमर्णवस। मरुन्दिरग्न आ गहि (७)
आ ये तन्वन्ति रश्मिभिस्तरः समुद्रमोजला मरुन्दिरग्न आ गहि (८)
अभि त्वा पूर्वपीतये सृजामि सोम्यं मधु। मरुन्दिरग्न आ गहि (९)

*ரிக்வேதம் 1:19:1-9*

*இவை ரிக்வேதத்தில் இடம்பெற்றுள்ள சுலோகங்கள். இந்த சுலோகங்களில் (மாருத்பிஹி ராக்னா) ஆஹாஹி அக்னியின் இரகசியம் பாலைவன மக்களுக்கு வெளிப்படுத்தப்பட்டு விட்டது)" என்னும் சுலோகமாவது*

திரும்பத் திரும்ப ஒன்பது இடங்களில் தொடராக இடம் பெறுகிறது.

இதே நடையழகு திருக்குர்ஆனிலும் காணப்படுகிறது. சூரா ரஹ்மானில் (ஃபபி அய்யி ஆலாஇ ரப்பிகுமா துகத்திபான்) ஆகவே நீங்கள் இரு சாராரும் உங்கள் (இரு சாராருடைய) இறைவனின் அருட்கொடைகளில் எதைப்பொய்யாக்குவீர்கள்? என்னும் வசனமானது திரும்ப திரும்ப 31 இடங்களில் இடம் பெறுகிறது.

خَلَقَ الاِنْسَانَ مِنْ صَلْصَالٍ كَالْفَخَّارِ وَخَلَقَ الْجَآنَّ مِنْ مَّارِجٍ
مِّنْ نَّارٍ فَبِاَىِّ اٰلَآءِ رَبِّكُمَا تُكَذِّبَانِ رَبُّ الْمَشْرِقَيْنِ وَرَبُّ
الْمَغْرِبَيْنِ فَبِاَىِّ اٰلَآءِ رَبِّكُمَا تُكَذِّبَانِ مَرَجَ الْبَحْرَيْنِ يَلْتَقِيٰنِ
بَيْنَهُمَا بَرْزَخٌ لاَّ يَبْغِيٰنِ فَبِاَىِّ اٰلَآءِ رَبِّكُمَا تُكَذِّبَانِ يَخْرُجُ
مِنْهُمَا اللُّؤْلُؤُ وَالْمَرْجَانُ فَبِاَىِّ الاءِ رَبِّكُمَا تُكَذِّبَانِ وَلَهُ الْجَوَارِ
الْمُنْشَئَاتُ فِىْ الْبَحْرِ كَالاَعْلاَمِ فَبِاَيِّ اٰلَآءِ رَبِّكُمَا تُكَذِّبَانِ

(உதாரணத்திற்கு 5 வசனங்கள் தரப்பட்டுள்ளன. மேலும் பார்க்க திருக்குர்ஆன் அத்தியாயம் 55)

திருக்குர்ஆனில் அத்தியாயம் (54) அல்கமரில்

"நிச்சயமாக இக்குர்ஆனை நன்கு நினைவு படுத்திக் கொள்ளும் பொருட்டே எளிதாக்கி வைத்திருக்கின்றோம். எனவே (இதிலிருந்து) நல்லுணர்வு பெறுவோர் உண்டா என்னும் வசனம் திரும்பத் திரும்ப 5 இடங்களில் இடம் பெறுகிறது. இன்னும் அத்தியாயம் (77) அல்முர்ஸலாத்தில்

பொய்ப்பிப்பவர்களுக்கு அந்நாளில் கேடு தான்" என்னும் வசனமானது திரும்பத் திரும்ப 10 இடங்களில் இடம் பெறுகிறது.

ரிக் வேதத்தில் "நா பான்ற மான்யசி ஷாம் ஜயக அத்ஹித் அனு அஸ் (ரிக் 10:133) என்னும் சுலோகம் 5 இடங்களில் திரும்பத் திரும்ப வருகிறது இன்னும் ரிக்வேதத்தில் 'விட்டான்மி அஸ்யரோதசி' (ரிக் 1:105) என்னும் சுலோகம் திரும்பத் திரும்ப 18 இடங்களில் வருகிறது. யசூர் வேதத்தில் 12 வது அத்தியாயத்தில் 'கஷ்மி தேவயா ஹவிஷ வித்ஹெம் என்னும் சுலோகம் 9 இடங்களில் திரும்பத் திரும் வருகிறது.

திருக்குர்ஆன் மூலமொழியில் இருப்பது போல் இந்துக்களின் ஆதி கிரந்தங்களும் ஓரளவுக்கு மூலமொழியில் இருப்பதால் இந்த ஒற்றுமையைக் காண முடிகிறது. இயேசுவுக்கு அருளப்பட்ட இன்ஜீல் (இராஜ்ஜியத்தின் சுவிஷேஷம்) மூல மொழியான அராமிக்கில் இப்போது இருக்குமானால், மோஸஸிற்கு அருளப்பட்ட தவ்றாத் (தோரா) ஹிப்ருவில் இருக்குமானால், திருக்குர்ஆனும், தோராவும், சுவிஷேஷமும், இந்துக்களின் ஆதி கிரந்தங்களும் ஒரே நடையழகில் தான் அமைந்திருக்கும். ஆனால் இன்ஜீலும் தவ்றாத்தும் மூல மொழியில் இல்லை. ஆதிகிரந்தங்கள் ரிக், யசூர், சாம், அதர்வம் என்று பகுக்கப்பட்டு பல்வேறு இடைச்செருகல்களுக்கு உட்பட்டுவிட்டதால் பல வேறுபாடுகளை காண முடிகிறது.

கிறிஸ்தவர்களின் இராஜ்ஜியத்தின் சுவிஷேஷத்தை குர்ஆன் 'இன்ஜீல்' என்கிறது. யூதர்களின் தோராவை 'தவ்றாத்' என்கிறது. யூத கிறிஸ்தவர்களின் சங்கீதத்தை 'ஸபூர்' என்கிறது. இந்துக்களின் ஆதிகிரந்தங்களை குர்ஆன் ஏதாவது பெயர்கொண்டு அழைக்கிறதா எனக் காண்போம்.

# ஆதி கிரந்தம் - ஆதிகியான்

இந்துக்கள் தங்களிடமுள்ள ரிக், யசூர், சாம, அதர்வன வேதங்களை - 'ஆதி கிரந்தங்கள்' என்றும் 'ஆதி கியான்' என்றும் கூறுவர். இந்து வேதங்கள் சமஸ்கிருத மொழியில் அமைந்திருப்பதைக் காண்கிறோம். வேதம் இறக்கியருளப்பட்ட காலத்தில் எழுத்துப்பயிற்சி இல்லாததால் ஆசிரியர்கள் வேதங்களை வாய்வழியாக ஓதி வந்தனர். அவ்வாறே தலைமுறை தலைமுறையாகச் சென்ற பல நூற்றாண்டுகளாக வாய்மொழியாகவே ஓதப்பட்டு வந்த வேதங்களை இன்று வரை கற்கப்பட்டும், கற்பிக்கப்பட்டும், ஓதப்பட்டும் வருகின்றன. சென்ற ஒரு நூற்றாண்டுக் காலத்திற்குள்ளாகத் தான் வேதக்ஙளை எழுதுவது, அச்சிடுவது, மொழி பெயர்ப்பது என்னும் பழக்கங்கள் ஏற்பட்டுள்ளன.

எழுத்துமுறை உலகிலேயே முதன் முதலாக பினீசியர் என்னும் கிழக்கு மத்திய தரைப்பிரதேச மக்களால் கண்டுபிடிக்கப்பட்டது (உருவாக்கப்பட்டது) என்பது வரலாறு அறிந்தது. பினீசியாவிலிருந்து மொசப்பட்டோமியா வழியாகவும் பாரசீகம் வழியாகவும் வந்து இப்புதுமை இந்தியாவை அடைந்திருக்க வேண்டும். ஆதியில் இந்தியாவில் பழக்கத்திற்கு வந்த எழுத்து முறை 'பிராமி' எனப்படும். இவ்வெழுத்துக்களிலேயே அசோகரது கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டுள்ளன.

இந்துக்களின் வேதங்கள் கி. மு. 1500க்கும் கி. மு. 1000த்திற்கும் இடைப்பட்ட காலத்தில் இயற்றப்பட்டதாக இருக்கலாம். சில நூற்றாண்டுகளுக்குப் பிறகு வியாஸர் அவற்றை தொகுத்தும் வகுத்தும் ரிக், யசூர், சாம், அதர்வம் என்று பாகுபடுத்தி பதிப்பித்திருக்கலாம் என்று இந்து மதப்பெரியார்கள் கூறுகின்றனர். அதற்கான சான்றுகள் எதுவும் கூறவில்லை.

வேதம் அருளப்பட்ட காலம் எழுத்துப்பயிற்சி என்பது இல்லாத காலமாதலால் வேதம் அருளப்படும் போது அது எழுதி வைக்க சாத்தியமில்லை.

காலம் காலமாக வேத மொழியாக (வாய்மொழியாக) இருந்த கிரந்தங்கள் பின்பு பிரகிருத மொழிக்கு மாற்றப்பட்டது. (பாகத அல்லது பிராகிருத மொழி என்பது பாமர மொழியாகும்) பின்பு பிராகிருத மொழியிலிருந்து சமஸ்கிருதத்திற்கு மாற்றப்பட்டது. (சமஸ்கிருதம் என்றால் செப்பனிடப்பட்ட மொழி - அறிஞர்கள் மொழி) இவ்வாறு காலம் காலமாக வாய்மொழியாக இருந்து பின்பு மொழிபெயர்ப்புக்குட் பட்டு வந்ததால் அதில் இடைச்சொருகல் ஏற்படவும், கருத்துச் சிதைவு ஏற்படவும், ஏராளமான வாய்ப்புகள் இருக்கின்றன.

**நூஹ் (அலை) அவர்களுக்கு அருளப்பட்ட வேதம் அப்படியே இப்போது இருக்குமானால் அது மொழி மாற்றத்தைத் தவிர மற்றெல்லா வகையிலும் அது திருக்குர்ஆனுக்கு ஒத்ததாகவே இருக்கும்.**

அல்லாஹ் தன் திருக்குர்ஆனில் பல இடங்களில் தூதர்களை குறிப்பிடும் போது நூஹ், இப்ராஹீம், மூசா, தாவூத், ஈஸா (அலை) அவர்கள் முஹம்மது (ஸல்) அவர்கள் அனைவரையும் சிலாகித்துக் கூறுகிறான். முஹம்மது (ஸல்) அவர்களுக்கு குர்ஆனையும், ஈஸா (அலை) அவர்களுக்கு இன்ஜீலையும், தாவூத் (அலை) அவர்களுக்கு ஸபூரையும் இப்ராஹிம் (அலை) அவர்களுக்கு சில ஆகமங்களையும் வழங்கியதாகக் கூறுகிறான். ஆனால் நூஹ் அலை அவர்களுக்கு வழங்கிய வேதம் பற்றி நேரடியாக எதுவும் குறிப்பிடவில்லை.

இனங்களைக் குறிப்பிடும் போது யூதர்கள், கிறிஸ்தவர்கள் ஸாபியீன்கள், முஸ்லிம்கள் என்று பிரித்தறிவிக்கிறான். அதில் ஸாபியீன்களக்கு வேதம் அருளப்பட்டதாகவும் கூறுகிறான்.

(குர்ஆன் வியாக்யானி இப்னுகஸீர் தன்னுடைய தப்ஸீர் இப்னு கஸீரில் ஸாபியீன்கள் என்பவர்கள் நூஹ் நபியுடைய இனத்தவர்களே என்று கூறுகிறார்.

ஸாபியீன்கள் நெருப்பை வணங்குபவர்களாகவும், சூரியன் சந்திரன் நட்சத்திரங்களை வணங்குபவர்களாகவும் கிரகபலன், சோதிடம், இவற்றில் நம்பிக்கையுடையவர் களாகவும், வானவர்களை (தேவர்களை) வணங்கக் கூடியவர்களாகவும் இருப்பார்கள் என்று மார்க்க அறிஞர்கள் விளக்கம் கொடுக்கின்றார்கள். இந்தவணக்க வழிபாட்டு முறைகள் அனைத்தும் அப்படியே அமையப்பெற்ற இனத்தவர் இந்துக்களே என்றுதெளிவாக அறிகிறோம். ஆகவேகுர்ஆன் கூறும் ஸாபியீன்கள் என்பவர்கள் இந்துக்களே என்று தெளிவாக விளங்க முடிகிறது.

இந்த ஸாபீயீன்களுக்கு அனுப்பப்பட்ட தூதர் அதாவது இந்து சமூகததிருக்கு அனுப்பப்பட்ட தூதர் நூஹ் (அலை) அவர்களே.

குர்ஆன் தவ்ராத்தையும் இன்ஜீலையும், ஸபூரையும் இப்ராஹீமின் ஆகமங்களை தவிர்த்து ஸு'ஹு'ஃபில் உலா" "ஜு'பூருல் அவ்வலீன்" (முதல்வேதம், முன்னோர்களின் வேதம்) என்னும் பெயர்களையும் குறிப்பிடுகிறான். முதல் வேதம் முன்னோர்களின் வேதம் என்றால் குர்ஆன், இன்ஜீல், ஸபூர், தவ்ராத், இப்ராஹிமின் ஆகமங்களுக்கு முந்தையதாகத்தான் இருக்க வேண்டும்.

இந்த வேதங்கள் அருளப்பட்ட தூதர்களுக்கு முந்தைய தூதர் நூஹ் (அலை) அவர்கள் தான். நூஹ் (அலை) அவர்களின் சமுதாயம் தான் ஸாபியீன்கள். ஸாபியீன்கள் தாம் இக்காலத்தில் இந்துக்கள் என்றழைக்கப்படுகிறார்கள் இந்துக்கள் தங்களிடையேயுள்ள வேதங்களை "ஆதி கிரந்தம்" என்றும் "ஆதி கியான்" என்றும் கூறுகின்றனர். "ஸு'ஹு'ஃபில் உலா" "ஜு'பூருல் அவ்வல்" என்னும் பெயர்களுக்கு இணையான

சமஸ்கிருத சொல், "ஆதி கிரந்" "ஆதி கியான்" ஆகும். குர்ஆன் கூறும் ஸு'ஹு'ஃபில் உலா' "ஜ'பூருல் அவ்வலீன்" தாம் இந்துக்களின் "ஆதி கிரந்தம்" 'ஆதி கியான்' என்பது தெளிவாகிறது.[1]

இந்த பெயர் மாற்றம் தவிர்க்க முடியாதது ஆகும். குர்ஆன் கிறிஸ்தவர்களை நசாராக்கள் என்றழைக்கிறது. கிறிஸ்தவர்கள் எவரும் தங்களை நசாராக்கள் என்று கூறிக்கொள்வதில்லை. குர்ஆன் தாவூதிற்கு அருளிய வேதத்தை ஜபூர் என்று அழைக்கிறது. யூதர்களும் கிறிஸ்தவர்களும அதை 'சங்கீதம்' PSALMS என்று தான் அழைக்கிறார்கள். அது போல் குர்ஆன் கூறும் 'ஸு'ஹு'ஃபில் உலா'வையும் 'ஜீபுருல் அவ்வலீனையும் இந்துக்கள் ஆதிகிரந்தங்கள் என்றும் ஆதிகியான் என்றும் கூறிக்கொள்கின்றனர்.

நூஹ் (அலை) அவர்களுக்கு இவ்விரு வேதங்களில் ஒன்று ஜலப்பிரளயத்திற்கு முன்பும் மற்றொன்று ஜலப்பிரளயத்திற்கு பின்பும் அருளப்பட்டதாயிருக்கலாம். அல்லாஹ்வே நன்கறிந்தவன், குர்ஆன் கூறுகிறது.

***நிச்சயமாக இது முன்னோர்களின் வேதங்களிலும் (ஜ'பூருல் அவ்வலீனிலும்) அறிவிக்கப்பட்டிருக்கிறது. (26:196)***

' சங்கீதத்தையும், தோராவையும், சுவிஷேஷங்களையும் தவிர்த்து முன்னோர்களின் வேதங்களிலும் அறிவிக்கப்பட்டிருப்பதாக அல்லாஹ் குறிப்பிடுகிறான்.

உலகிலேயே பழமையான வேதங்கள் இந்துக்களிடமேயுள்ளது. ஓரளவுக்கு மூல மொழியில் உள்ள வேதங்களும் இந்துக்களுடையதே. நிச்சயமாக இது முன்னோர்களின் வேதங்களிலும் அறிவிக்கப்

---

1. ''நூஹ்வின் சமுதாயத்தினரே ஸாபீயீன்கள், ஸாபியீன்களே இந்துக்கள்'' என்பது பற்றிய விரிவான விளக்கத்திற்கு ''ஆசிரியரின் உலகச்சமயங்கள் ஒரு தத்துவப்பார்வை" நூலில் இன்ஷா அல்லாஹ் காணலாம்.

பட்டிருக்கிறது என்று குர்ஆன் கூறியதை மெய்பிக்கும் படியாக இந்துக்களிடமுள்ள கிரந்தங்களிலும் குர்ஆனுக்கு ஒத்த கருத்துடைய சில வசனங்களையும், குர்ஆனுக்கு இணையான நடையழகையும் முன்பு கண்டோம்.

நபியே! இன்னும் உமக்கு முன்னர் வஹீ மூலம்....

**......தெளிவான அத்தாட்சிகளையும், வேதங்களையும் (அத்தூதர்களுக்கு கொடுத்தனுப்பினோம்)**

***(16:43–44)***

என்று அல்லாஹ் குர்ஆனில் குறிப்பிடுகிறான்.

தொன்மையான காலத்து மரபுச் செய்திகளைத் தொகுத்தே அழகான பாடல்களை உருவாக்கியிருக்கிறேன். (ரிக் : 8:6:11) என்று ரிக்வேதமும் கூறுகிறது.

இதிலிருந்து குர்ஆன் குறிப்பிடும் 'தெளிவான அத்தாட்சிகளையும் வேதங்களையும்' கொண்டு தொகுக்கப்பட்ட பாடல்களே ரிக், யசூர், சாம், அதர்வம் என்று விளங்கிக் கொள்ள முடியும்படியாக ரிக் வேதத்தின் சுலோகம் அமைந்துள்ளது.

அல்லாஹ், நூஹ் (அலை) அவர்களுக்கு அருளிய வேதங்களான ஆதிகிரந்தம், ஆதிகியான் தொன்மையான காலம் தொட்டு வாய் மொழியாக, மரபுச் செய்தியாக இருந்தது. அவைகளே ரிக், யசூர்,.சாம், அதர்வம் என்று பகுத்து தொகுக்கப்பட்டிருக்கிறது என்று .விளங்க முடிகிறது.

வேதங்கள் தவிர்த்து புராணங்கள், உபநிஷத்துக்கள் ஆரண்யங்கள், ஸ்மிருதிகள் எல்லாம் இந்துக்களின் புனித நூல்களாக உள்ளன. இறுதி வேதத்திற்கு விளக்கவுரையாக எப்படி இறைதூதரின் போதனைகள் (நபிமொழிகள்) அமைந்திருக்கிறதோ அதுபோல் ஆதிகிரந்தங்களுக்கு ரிஷிகளால் எழுதப்பட்ட வியாக்யானங்களாக இந்த புராணங்களும் உபநிஷத்துக்களும், ஆரண்யங்களும் எழுதப்பட்டிருக்க வேண்டும். அல்லது நூஹ். நபியின்

சமுதாயத்திற்கு - நூஹ் நபியின் வேதத்தைப் பின்பற்றி போதிக்க வந்த நபிமார்களின் வியாக்யானங்களை தொகுத்து உருவாக்கப்பட்டவையாக அவைகள் இருக்க வேண்டும். இவைகளும் பிற்காலத்தில் தொகுக்கப்பட்டு பதிக்கப்பட்டவையாக இருப்பதால் இவைகளிலும் ஏராளமான இடைச்செருகல்களும், கருத்துச் சிதைவுகளும் ஏற்பட வாய்ப்புள்ளது. நூஹ் நபி அவர்களுக்குப் பின்னும் அவர் சமுகத்தார்க்கு ஏராளமான தூதர்களை அனுப்பியே இருக்கிறான் அவர்கள் எல்லாம் நூஹு விற்கு அருளிய வேதத்தை எடுத்து உபதேசிப்பவர்களாக இருந்திருக்க வேண்டும். அல்லது அவர்களுக்கும் தனி வேதம் வழங்கப்பட்டிருக்க வேண்டும். **இறைவனால் அனுப்பப்பட்ட அனைத்து தூதர்களின் மார்க்கமும் ஒரே அடிப்படையைக் கொண்ட இஸ்லாம் மார்க்கமாகத்தான் இருந்தது.** அவர்கள் கொண்டு வந்த வேதங்களும் ஒரே அடிப்படையைத் தான் போதித்தது.

*(எல்லா சமுதாயங்களுக்கும், அனுப்பப்பட்ட தூதர்களுக்கும் வேதங்கள் அருளப்பட்டதாகவே அல்லாஹ் கூறுகிறான். பார்க்க அல்குர்ஆன் 93:213, 6:83-86, 89, 19:12, 87:19)*

# முதல் ஆலயம்

ஏக இறைவனை எவரும் எதுவும் சென்றடைய முடியாத படிக்கு இப்பிரபஞ்சத்திற்கு அப்பாலிருக்கிறான். அவனை எவரும் காணமுடியாது. காணுதற்கரியவன் என்று இஸ்லாமிய இந்து கிறிஸ்தவ வேதங்கள் கூறியிருக்கின்றன என்பதை இரண்டாம் அத்தியாயத்தில் கண்டோம்.

யாரும் காணாதபடிக்கு இப்பிரபஞ்சத்திற்கு அப்பாலிருக்கும், இறைவனே வணக்கத்திற்கு தகுதியானவன். அந்த ஏக இறைவனுக்கு எந்த ஒரு உருவமும் கொடுக்காது, விக்ரகமும் வைக்காது வணங்க வேண்டும் என்பதற்காக இறைஇல்லம் ஒன்றை நிறுவி அதனை முன்னோக்கியே வணங்க வேண்டும் என்பது இறைகட்டளையாகும். ஆதிமனிதர் முதல் இறுதி மனிதர் வரை ஏக இறைவனுக்கு அர்பணிக்கப்பட்ட ஆதி இறைஇல்லத்தை முன்னோக்கியே வணங்கி வந்தனர். வணங்கிவருவர். அந்த ஆதி இறைஇல்லமானது அரபு நாட்டில் மக்கா நகரிலுள்ள 'கஃபா' என்னும் இறை இல்லமாகும்.

**"இவ்வுலகில் அல்லாஹ்வை வணங்குவதற்கென மனிதர்களுக்கு வைக்கப்பட்ட முதல்வீடு நிச்சயமாக பக்கா (மக்கா)வில் இருப்பது தான். புன்னியமான தாகவும், அகிலத்தார்க்கு நேர்வழியாகவும் இருக்கிறது." (3:96)**

என்று அல்லாஹ் தன் திருமறையில் கூறுகிறான்.

முதல் மனிதர் - ஆதி தந்தை ஆதம் (அலை) அவர்களால் கட்டப்பட்ட இவ்விறை இல்லமானது இவ்வுலகில் ஏக இறைவனுக்கு அர்ப்பணிக்கப்பட்ட முதல் வணக்கஸ்தலமாகும்.

நூஹ் நபி காலத்தில் ஏற்பட்ட ஜலப்பிரளயத்தில் அது அழிந்துவிட்டதால் பின்பு இப்ராஹீம் நபி

அவர்களால் திரும்பவும் கட்டப்பட்டது. இந்த உண்மையை ஒப்புக் கொள்ளும் பல வசனங்கள் கிறிஸ்தவ வேதமான பைபிளில் உள்ளன.

ஏக இறைவனை வணங்குவதற்காக கட்டப்பட்ட இந்த தொன்மையான ஆலயத்தை முன்னோக்கியே அனைத்து இறை தூதர்களும் அவர்களைப்பின் பற்றியவர்களும் வணங்கியிருக்கின்றார்கள்.

இஸ்ரவேலர் சந்ததியில் தோன்றிய ஒரு சில தூதர்கள் இடைப்பட்ட காலத்தில் சுலைமான் (அலை) (King Solomon) அவர்கள் கட்டிய ஜெருசலத்திலுள்ள பைத்துல் முகத்தஸ்ஸை முன்னோக்கித் தொழுததாக பைபிள் கூறுகிறது.

தானியேல்..... தன் வீட்டிற்குள்ளே போய், தன் மேல் அறையிலே எருசலேமுக்கு நேராக பலகணிகள் திறந்திருக்க அங்கே தான் முன் செய்து வந்தபடியே மூன்று வேளையும் தன் தேவனுக்கு முன்பாக முழங்காற்படியிட்டு ஜெபம் பண்ணி ஸ்தோத்திரம் செலுத்தினான்.

(தானியேல் 6:10)

இறுதித்தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களும் கூட இடைப்பட்ட சில காலம் பைத்துல் முகத்தஸ்ஸை முன்னோக்கித் தொழுதார்கள் உலக இறுதிநாள் வரை அனைத்து இறை விசுவாசிகளும் ஆதி இறைஇல்லத்தை முன்னோக்கியே தொழ வேண்டும் என்பது இறைவனின் இறுதி கட்டளையாகும்.

இஸ்ரவேலர் சந்ததியில் தோன்றிய ஒரு சில தூதர்களைத் தவிர்த்து ஆதி தூதர் முதல் இறுதி தூதர்வரைக்கும் இடைப்பட்ட அனைத்துத்தூதர்களும் ஆதி இல்லமான கஃபாவை முன்னோக்கியே ஏக இறைவனை வணங்கி வந்தார்கள். அந்த ஆதி இறைஇல்லத்தின் சிறப்பை திருக்குர்ஆன் மட்டுமல்ல - பைபிள் மட்டுமல்ல - இறை வேதத்தை சிதைத்து விட்டு

இறைத்தூதர்களைத் தொலைத்து விட்டு நிற்கும் இந்து சமூகத்தின் புனித நூற்களும் கூறுகின்றன.

ஆதி இறை இல்லத்தை - கஃபாவை - கஃபத்துல்லாஹ், பைத்துல்லாஹ், பைத்துல் ஹரம், பைத்துல் அதீக், பைத்துல் மஃமூர், மஸ்ஜிதுல் ஹராம் என்று பலப்பெயர்களில் குர்ஆனும் ஹதீஸும் குறிப்பிடுவது போன்று; இலாஸ்பாத், இலயாஸ் பாத், நபா பிரதிவியா, நபிகமால்.

ஆதி புஷ்கார் திர்தா, துரா காபன் என்று பலப்பெயர்களில் இந்து வேதங்களும் புராணங்களும் குறிப்பிடுகின்றன.

இலாஸ்பாத் : இல் (il), இல்லய்யஃ (illiah), இலா (Ila), இலாயா (Ilya) - சமஸ்கிருத சொல்லான இதன் பொருளானது 'வணக்கத்திற்குரிய ஒன்று' என்பதாகும்.

(வணக்கத்திற்குரியவனை அரபியில், 'இலாஹ்' என்றும், ஹிப்ருவில் 'எல், எலோஹ், எலோஹிம்' என்றும்; அராமிக்தில் 'எல்லாய்' என்றும் கூறுவதை அறிகிறோம்.)

'பாத்' என்பது இடத்தைக் குறிக்கும் சொல்லாகும். இலாஸ்பாத் என்பதற்குக் 'இலா'விற்குரிய இடம் - வணக்கத்திற்குரிய இடம்' என்றாகிறது.

Sir. M. Monier William's -ன் சமஸ்கிருத - ஆங்கில அகராதியில் 'இலாஸ்பாத்' என்பது புண்ணியஸ்தலத்தின் பெயராகும் என்று குறிப்பிட்டுள்ளார்.

இலா (ila) என்பது குறிப்பிட்ட கடவுளின் பெயர். 'இலாஸ்பாத்' என்னும் பொழுது 'கடவுளுக்குரிய ஸ்தலமாகும்' என்று GRIFTITH' மொழி பெயர்த்துள்ளார்.

பைத்துல்லாஹ் (அல்லாஹ்வுடைய இல்லம்) என்று அரபியில் கூறுவதையே இந்து கிரந்தங்கள் சமஸ்கிருதத்தில் 'இலாஸ்பாத்' என்று கூறுகிறது.

இலயாஸ்பாத் : இலயாஸ்பாத் 'பிரதி வி.கா. பவித்திரஸ்தான்' என்று பண்டித ஸ்ரீராம் சர்மா

ஆச்சாரியர் இந்தியில் மொழிபெயர்த்துள்ளார். 'பூலோகத்திலுள்ள புண்ணியஸ்தலம்' என்பது இதன் பொருளாகும்.

*மக்தேஷ்வர் :* 'மக்' என்பது 'மக்கா' நகரைக் குறிப்பிடுகிறது 'ஈஸ்வர்' என்றால் 'கடவுள்' 'மக்தேஷ்வர்' என்றால் 'மக்காவின் கடவுள்' என்று Sir. M. Monier William's தன் சமஸ்கிருத ஆங்கில அகராதியில் கூறுகிறார்.

*நபா ப்ரதிவியா :* 'நபா' என்பதன் பொருள் 'மையம்' 'ப்ரதவி' என்பதன் பொருள் 'பூமி' 'நபா ப்ரதிவி' என்னும் பொழுது பூமியின் மையம் என்றாகிறது. ஒவ்வொரு முஸ்லிமும் மக்காவிலுள்ள கஃபாவானது பூமியின் மையத்திலுள்ளது என்று தான் கூறிக்கொள்கின்றனர்.

"இலயாஸ்த பதே வாயம் நபா ப்ரதிவியா ஆதி"

*(ரிக் 3:29:4)*

இலாவுடைய ஸ்தலமானது (இல்லமானது) பூமியின் மையத்திலுள்ளது என்று ரிக்வேதம் கூறுகிறது.

*நபிகமால் :* படைப்பினங்கள் அனைத்தையும் படைத்த ஈஸ்வரன் அதன் பிரதிநிதியாக பிரம்மனை நியமித்தார். எல்லா சிறப்பியல்புகளையும் பூமிபெற்ற பின்பு பிரம்மன் தன்னுடைய சிம்மாசனத்தை பூமி மீது அமைத்தார். பூமி தாவரங்களை பிரசவித்ததும் 'ஜம்பு துவிப்'பில் ஆகும் (ஜ+அம்பு+துவிப் = வாழ்க்கை + நீர்+தீவு = நீர் எங்கு கிடைக்கிறதோ அங்கு தான் வாழ்க்கை துவங்குகிறது) அந்த மையப்பகுதியிலிருந்து தான் செயல் மற்றும் வழிபாடும் துவங்கியது. நபிகமால் - பூமிக்குள்ளிருந்து எடுக்கப்பட்ட பாறைகளாலும், கனிமப் பொருள்களாலும் அடுக்கப்பட்டதாகும். அது ஆரியர்கள் அல்லாதவர்கள் குடியிருக்கும் இடமாகவும், அறிந்து கொள்ள முடியாத இடத்திலும் இருக்கிறது. நபிக்கமால் ஒன்று கூடும் மையமாகவும் குடிநீர் (ஜம் ஜம்

நீரைக்குறிக்கிறது) வழங்கும் இடமாகவும் இருக்கும். ஹரிவன்ஸ் புராணா பகுதி 2

(பண்டிட் ஸ்ரீ ராம்சர்மாவின் 'பதம் புராணா' மொழிபெயர்ப்பு நூல் பக்கம் 499)

**ஆதி புஷ்கார் திர்தா:** திர்தா என்றால் மிகவும் புராதன புனிதஸ்தலம் என்பதாகும். பதம் புராணாவில் நபிகமாலுக்கு இந்த சொல் உபயோகப்படுத்தப் பட்டுள்ளது.

புஷ்கார் திர்தாவிற்கு சேவை புரிவோமானால் பாவங்கள் நம்மை விட்டு மீட்கப்படுகிறது. புஷ்கார் திர்தாவிற்கு புண்ணிய யாத்திரை செல்கின்றவர்கள். நிலையான வெகுமதிக்கு தகுதியுடையவராவார். புஷ்கார் திர்தா புன்னிய ஸ்தலங்களிலெல்லாம் மிகப்பழமையானது. இங்கு சென்று நீராடுபவர்களுடைய பாவங்கள் கழுவப்பட்டு விடுகிறது.(கல்யான் அக்டோபர் 94, பக்கம் 96)

**தரு காபன்** : சமஸ்கிருதத்தில் 'தர்' என்பதற்கு 'மனைவி' வனாந்தரம்' என்கிற பொருள்கள் உண்டு. குர்ஆனும் கஃபாவை பெண் என்றும், மக்காவை நகரங்களின் தாய் என்றும் வர்ணிக்கிறது. அரபை வனாந்திரம் என்றும் கூறுவர். பைபிளும் வனாந்திரம் என்றே குறிப்பிடுகிறது. 'காபன்' என்பது தெளிவாக கஃப்ாவை குறிக்கும் சொல்லாகும். தருகாபன் என்பதற்கு வனாந்தரத்திலுள்ள கஃபா என்றாகிறது.

நலந்த விஷால் ஷப்த் ஷாகர் அகராதியானது தருகாபன் என்பதற்கு வனாந்திரத்திலுள்ள புண்ணியஸ்தலம் என்று பொருள் கூறுகிறது.

ஏ பக்தர்களே! கடற்கரை அருகிலிருக்கும் தருகாபன் மனிதனுடையதல்ல. அங்கு நீ வழிபாடு பண்ணுவாயாக அது நீ சொர்க்கம் செல்ல பரிந்துரை செய்யும். (ரிக் : 10:155:3)

என்று ரிக்வேதம் கூறுகிறது.

பிரபஞ்சத்தைப் படைத்து காத்து அருள் செய்யும் இறைவன் இப்பிரபஞ்சத்திற்கு அப்பால் இருக்கிறான். படைப்புகள் வேறு படைத்தவன் வேறு. அந்த படைப்பாளனையே வணங்க வேண்டும். அவனுக்கு எந்த ஒரு உருவமும் கற்பிக்காது. விக்ரகமும் வைக்காது ஆதி இறை இல்லத்தையே முன்னோக்கி வணங்க வேண்டும் என்று இந்து கிறிஸ்தவ இஸ்லாமிய வேதங்கள் ஒருமித்தக் குரலில் கூறியிருக்க இஸ்லாம் தவிர்த்து மற்ற மதங்களோ கடவுளுக்கு உருவம் கற்பித்து விக்ரகங்கள் வைத்தும் வணங்குகின்றன. இன்னும் கடவுள் அவதாரம் எடுத்து வருவார். கடவுளுக்கு குடும்பங்கள் உண்டு. மனைவிமக்கள் உண்டு, கடவுள் தூணிலும், துரும்பிலும் இருக்கிறார் என்கின்றன.

இவ்வாறு ஏகதெய்வக்கொள்கையை விட்டு பல தெய்வக்கொள்கைக்கு தாவியதால், ஏக இறைவனின் சனாதன தர்மம் விட்டு அது இந்து மதமாக மாறியது.

இந்து மத விசுவாசிகள் ஆதி இறை இல்லத்தை முற்றிலும் மறந்தாலும் அறிந்தோ அறியாமலோ கஃபாவிற்கு செய்வது போன்ற கிரியைகளை செய்கின் றனர். உலக மக்கள் அனைவரும் ஒரு ஒழுங்குடன் ஓர்இறைவனை வணங்குவதற்காக நிறுவப்பட்டது தான் கஃபா என்னும முதல் ஆலயம் அதை முன்னோக்கி ஏக இறைவனை மட்டுமே வணங்குங்கள். அதை வலம் வாருங்கள் என்று சனாதன (இஸ்லாமிய) தர்மம் போதித்திருக்க இந்துக்கள் காஃபா வடிவில் வீட்டிற்கு ஒரு துளசி மடம் கட்டி அதில் துளசிச் செடி வைத்தும்; ஊருக்கு ஒன்றிரண்டு கற்பக் கிரம் (கோவிலினுள்) கஃபாவடிவில் கட்டி அதனுள் விக்ரகங்களை வைத்தும் திருமண விஷேச நாட்களில் அக்னி குண்டமும் (கஃபா வடிவில்) கட்டி அதில் அக்னி வளர்த்தும் அவைகளை வணங்கியும் வலம் வரவும் செய்கின்றார்கள்.

சனா தன தர்மத்தின் ஆதிகிரந்தம் கூறுவதைத்தான் இஸ்லாத்தின் இறுதி கிரந்தம் கூறுகிறது. ஏக தெய்வக் கொள்கையை விட்டு பல தெய்வங்களுக்கு தாவியதாலும், இறை தூதர்களை இறை அவதாரங்களாகவும் இன்னும் பலரையும் பலதையும் இறைவனாகவும் நம்பி, உண்மை இறைத்தூதர்களை நிராகரித்ததாலும்; மறு உலக (மறுமை) கொள்கையை விட்டு மறு பிறவி தத்துவத்தை ஏற்றுக் கொண்டதாலும்; சனாதன தர்மத்தின் அடிப்படையான ஆதி கிரந்தமும் ஆதி கியானும் சிதைந்ததாலும், தொலைந்ததாலும், ஏராளமான இடைச்செருகல்களுக்கு ஆளானதாலும், சனாதன தர்மம் கூறுகிற வர்ணாசிரமதர்மம் புகுத்தப்பட்டதாலும் சனாதன தர்மமானது வைதிகப்பிராமண மதமாகி பின் இந்து மதமானது.

மஹா நூவு(நுஹ் -அலை)க்கும் மற்ற மநு(தூதர்)க்களுக்கும் அருளப்பட்ட சனாதன தர்மம் வலியுறுத்தும் ஏகத்துவம் தூதுத்துவம் மறுமைக் கொள்கையை அடிப்படைக் கொள்கையாக கொண்டு அதில் உறுதியாக நின்று அகிலத்தார் அனைவரையும் ஏக இறைவனின் பாதையில் அன்புடன் அழைக்கிறோம். சாந்தி, சமாதான, சனாதன மார்க்கமான இஸ்லாம் ஓர் அன்னியமார்க்கமா? அன்னியோன்யமான மார்க்கமா?

நாம் முன்னோர்களின் மார்க்கமான, மூதாதையர்களின் மார்க்கமான - ஆதி மார்க்கமான இஸ்லாத்தை அன்னிய மார்க்கம் என்று கூறி எத்தனை தூரமாகி விட்டோம்.

நிச்சியமாக அல்லாஹ்விடத்தில் (அங்கீகரிக்கப் பட்ட) மார்க்கம் இஸ்லாம் தான்

-திருக்குர்ஆன் 3 : 19

# الإسلام فى الكتب الهندوكية

تأليف

ابوآسية

இந்து வேதங்களில் ஓரிறைக் கோட்பாடு வலியுறுத்தப் பட்டுள்ளது படைப்புகளை வணங்குவதை அவ்வேதங்கள் கண்டித்துள்ளன. இந்த உண்மைகளை அவ்வேதங் களிலிருந்தே தக்க சான்று களுடன் ஆசிரியர் இப் புத்தகத்தில் நிரூபித்துள்ளார்.

٢١٨
٢



# الإسلام في الكتب الهندوكية

تأليف

## أبو آسية

تاميلي

ردمك: ٨-٨٣٠-٥٨-٩٩٦٠-٩٧٨

المكتب التعاوني للدعوة والإرشاد وتوعية الجاليات بالبديعة
تحت إشراف وزارة الشؤون الإسلامية والأوقاف والدعوة والإرشاد
المملكة العربية السعودية - ص.ب ٢٤٩٣٢ - الرياض ١١٤٥٦
هاتف ٩٦٦-١-٤٣٢٠٨٨٨+ فاكس ٩٦٦-١-٤٣٠١١٢٢+